# ரோமாபுரி ராணிகள்



பேரறிஞர் அண்ணா

# பதிப்புரை

தமிழருக்குத் தமிழ்நெறி, தமிழ்முறை ஒழுக்கம், வீரம், கற்பு, காதல் எனும் பண்புகளைத் தரக்கூடியன கலையாக இருத்தல் வேண்டுமேயொழிய, வேறோர் இனத்தைப் புகழ்வதும் அதற்கு ஆதிக்கமளித்துத் தமிழ் மக்கள் மனதிலே தன்னம்பிக்கையற்றுப் போகும் படியும்; தமது இனத்தைப் பற்றியே தாழ்வாகக் கருதிக்கொள்ளும் படியான நிலைமையை உண்டாக்கும் கதை, காவியம் இலக்கியமென்பவைகளைக் கொளுத்த வேண்டுமென்று தனது படைப்புகள் மூலம் தமிழக மக்கள் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத்தியவர்தான் பேரறிஞர் அண்ணா.

இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டவர். தனது பேச்சாற்றலால் தமிழக மக்களைக் கட்டிப்போட்டவர். தனது வசீகரப் பேச்சால் உலகளவிலுள்ள சிறந்த பேச்சாளர்கள் பட்டியலில் இடம் பிடித்தவர். திராவிட கழகத்தில் தன்னை இணைத்துக் கொண்டு பெரியாரிடம் அனுபவப் பாடம் கற்றவர். அங்கிருந்து வெளியே றி திராவிட முன்னேற்றக் கழகம் எனும் தனிக்கட்சியை தோற்றுவித்து, பெரும்பான்மையான இடங்களில் வெற்றி பெற்று தமிழக முதல்வராக ஆன பின்பும்- தனது இறுதி மூச்சு உள்ளவரை பெரியாரின் கொள்கையை தவறாமல் கடைப்பிடித்தவர் அறிஞர் அண்ணா. அவரது படைப்புகள் அனைத்தும் காலத்தால் அழியாதவை- அவற்றுள் இந்நூலும் அடங்கும்.

- பதிப்பகத்தார்.

# முன்னுரை

ரோமாபுரி ராணிகள் :

ஒரு நாட்டின் வரலாறு என்பது உயர்ந்த கருத்துக்களை, தத்துவங்களை எடுத்துக்காட்டுகளுடன் நமக்கு வழங்குவது என்றார் பாலிங் புரூக் **(1678-1752) .** நாட்டிலுள்ள உயர்ந்த மனிதர்களின் வாழ்க்கை விளக்கமே வரலாறு என்றார் கார்லைல். மக்களின் வாழ்வுத் தொகுப்பே வரலாறு என்றார் எமர்சன். ஆகவே, எந்த ஒரு நாட்டின் வரலாறும் அந்த நாட்டு மக்களின் வாழ்வோவியங்களின் தொகுப்பாகின்றது. உலகில் தமிழகத்தைப் போன்று பழமையான நாகரிகம் வாய்ந்த நாடு ரோம். உயர்ந்த நாகரிகமும் பண்பாடும் செல்வமும் வீரமும் கலைகளும் மற்றநாடுகள் பொறாமை கொள்ளும் அளவிற்கு ரோம் நாட்டில் சிறந்து விளங்கின என்று வரலாறு கூறுகிறது. **15-10-1764** இல் கிப்பன் என்ற அறிஞர் ரோமின் அழிவுச் சின்னங்களைக் கண்டபோது அவர் மனம் ரோம் பேரரசின் வாழ்வும் வீழ்ச்சியும் பற்றி எழுதிட எண்ணிற்றாம். சிதைந்து கிடந்த கலைச் சின்னங்கள், சிதைந்து அழிந்துபோன ரோம் பேராசு பற்றி எழுதிடத் தூண்டியுள்ளது. கிப்பனை அது போன்றே, பேரறிஞர் அண்ணா கிப்பனின் வரலாற்று நூல்களையும் ரோம் பற்றிய அறிஞர்கள் பலரின் கருத்துக்களையும் படித்தபோது உலகில் வீரம், கொடை, அன்பு, கல்வி, கலை, தொழில், செல்வம், மன்னராட்சியில் மக்களாட்சி எனும் பலவற்றிலும் ஒப்பற்று உயர்ந்து விளங்கிய ரோம் பேரரசு ஏன் வீழ்ந்தது என்பது பற்றி எண்ணிடலானார். மேலும் பல நூல்களைக் கற்றிடலானார், விளைவு, "ரோமாபுரி ராணிகள்" என்ற பெயரில் "திராவிட நாடு" இதழில் **1942** -இல் தொடர் கட்டுரைகளாக வெளி வந்தன. ஏடு படித்த எல்லோரும் வியந்து வியந்து படித்து வீழ்ந்துபோன ரோமின் பெருமைகளையெல்லாம் தனிமனிதர் விருப்பும் வெறியும்

அழித்து ஒழித்துள்ளனவே என்று கலங்கிடலாயினர், அரசியல் காழ்ப்புடன் ஒரு கூட்டத்தினர் நூலின் நோக்கத்தினைப் போற்றிடாது, உணர்ந்திடாது தூற்றிடவும் செய்தனர்.

ரோமாபுரி ராணிகள், தொடரோவியம் நூல் வடிவம் பெற்றபோது, பேரறிஞர் அண்ணா, முன்னுரை ஒன்று தந்து, நூலின் ஆக்கத்திற்குக் காரணங்களையும் தேவையினையும் பொறித்துள்ளார். அதனைக்கூட அரசியல் அங்காடியினர் பார்க்கவில்லை.

பண்டைய ரோம் பேரரசு போக போக்கியங்களால் பொசுக்கப்பட்டது. வாளேந்தும் வீரர்கள் வளை ஏந்தும் தையலரின் அடிமைகளாகி, அரசை அழித்துக்கொண்டனர். அதற்குக் காரணமான காமவல்லிகளின் கதைகள் சுவை மட்டுமல்ல, கருத்துக்கள் பல தெரிந்துகொள்ள உதவி செய்யும்... காமத்துக்கே காலத்தையும் கருத்தை யும் செலவிட்டுக் கதிகெட்ட மன்னர்கள் உண்டு. ஒரு சரசியின் சல்லாபத்துக்காகச் சாம்ராஜ்யம் சிதைந்ததும் உண்டு. மோகனாங்கிக்காக ஒருவர் மீது ஒருவர் மோதிக்கொண்டு மோசம் போனதும் மடிந்து போனதுமுண்டு... ரோம் சாம்ராஜ்ய ராணிகளில் பல ரகங்கள் இருந்தனர். உருவத்தால் மட்டும் மாறுபட்டவர் களல்ல. நடத்தையால் மாறுபட்டவர்கள். கணவனுக்காகக் கண்களைக் கசக்கி வாழ்ந்தவர்களும், கணவரின் வாழ்க்கையைக் கசக்கிப் பிழிந்த காதகிகளும் உண்டு! அவர்களின் வாழ்க்கை வரலாற்றுத் தொகுப்புதான் இது என்று குறிப்பிடுகிறார் அண்ணா.

இத்தாலி, கிரீஸ், திரேஸ், மாசிடோனியா, ஸ்பெயின், பிரான்சு, பிரிட்டன், சிரியா, பாலஸ்தீனம், எகிப்து, ஆப்பிரிக்கா, ஆசியா, மத்தியதரைக்கடல் தீவுகள் என எங்கெங்கும் பரந்து விரிந்து மிகப்பெரும் பேரரசாக விளங்கியது ரோம் பேரரசு. அரசிகளின் காமப்பசியால் மட்டுமல்ல, அரசர்களின் காமக்களியாட்டத்தால் ஏற்பட்ட கொடுங்கோன்மையால், பெண்ணுக்கு உரிமை மறுக்கப்பட்டதால், பெண்களை விபசாரி களாக்கியதால் ரோம் பேரரசு வீழ்ந்தழிந்தது என்பதனை அண்ணா தந்துள்ளார் சான்றுகளுடன்.

நீரோ மன்னன் ஆடம்பரமு ம்

ஆணவ ஆட்சியும்:

"ஆடல் பாடல் ஒரு பக்கம்! சிரிப்பும் சரசமும் மற்றோர் பக்கம்! மதிமுக மாதரின் மதுர மொழிகளும், கனிரசமும் கலந்துண்டு,

போதையேறியோர் பிரிதோர் பக்கம்! புத்தமுது கிடைத்த து என்று பூரித்து, இடையழகையும் கடைக் கண்ணழகையும் எண்ணி எண்ணி உளம் மகிழும் உல்லாசர்கள் ஒருபக்கம்! நீரோ மன்னனின் விருந்து மண்டபம் கோலாகலக் காட்சியாக இருந்தது, மமதை மிகுந்த மன்னன்! மாதாவைக் கொன்றவன்! முதல் மனைவியைக் கொன்றவன்! இரண்டாம் மனைவியையும் கொன்றவன்! அவன் செய்யாத அக்கிரமம் கிடையாது. அவனுடைய தீய பார்வை தீண்டப்பெறாத திருமதிகளின் தொகை சொற்பம்! அவனுடைய கள்ள உள்ளத்தால் பலியான குடும்பங்கள் பல! எனினும் அவன் மன்னன்! மக்களின் தலைவன்! கோல் கொண்டவன்! எனவே அவனிடம் எத்தகைய கெட்ட நடத்தை இருப்பினும், நெஞ்சில் எண்ணிக் கண்ணீர் சிந்தமுடியுமே ஒழிய, எதிர்க்க மக்களால் முடியுமா? இது நீரோ மன்னனின் நம்பிக்கை!

ரோம் சாம்ராஜ்யம், ஒரு ஜூலியஸ் சீசரின் ஆணவத்தையே சகிக்க முடியாமல், சதியில் இறங்கிக் கொன்றதை நீரோ மறந்தான். முடிதரித்த தனக்கு எவரும் பிடியில் அடங்கிடுவர் என்றெண்ணினான்... ஆனந்தத்தின் எல்லையை அடைந்தான் நீரோ! அகந்தையும் அவனும் அளவளாவி மகிழ்ந்தனர்! பாவம்! அவன் அறியான் தன்னைத் தூக்கி எறியும் புரட்சிப்புயல் கிளம்பி விட்டது என்பதை!

மக்களின் நலனை மனதில் எண்ணாது மமதையோடு கொடுங்கோலாட்சி செய்யும் அரசன், தோணியிற்செல்லும் சீமான், சூறாவளியால் நாசமடைவதைப்போல், மக்களின் புரட்சியாலோ அரச அவையினரின் சதியாலோ சாய்வான்; இது சரிதம் ஆள்வோருக்கு எடுத்துக் காட்டும் எச்சரிக்கை! நீரோ மன்னன், இதனைக் கவனித்தானில்லை! கொடுங்கோலாட்சி புரிந்தான். ரோம் தீப்பற்றி எரியினும், யாழிசையை விட்டானில்லை! போகத்தில் புரண்டான்! புல்லருடன் வாழ்ந்தான்! புரட்சிப் புயல் வரவே தற்கொலை செய்ய முன்றான்; கட்டாரியால் குத்திக் கொண்டான்; அது சரியாகப் பாயாத தால், வேலையாள் அந்தப் பணியைச் செய்து வெட்டி வைத்திருந்த குழியில் தள்ளினான். இத்தகைய வரலாறுகளின் தொகுப்புதான் ரோமாபுரி ராணிகள்!

ரோம் பேரரசிகள் தங்கள் அழகை ஆயுதமாகக்கொண்டு, நாடுபோற்றிய வீரர்களை, இளவரசர்களை, ஆட்சிமன்ற அறிஞர்களை, மன்னரைத் தாக்கி, வீழ்த்தி, ஓடி வந்து தழுவும் படிச் செய்து, ரோம் பேரரசை ஆட்டிப் படைத்தனர். செங்கோல் அவர்களின் சிறுவிரல் அசைவால் அசைந்தது. படை அவர்களின் பார்வையால் பாய்ந்தது. படைத்தலைவர்கள் அவர்களின் பொம்மைகளாயினர். வேல்விழியால் விரும்பியதைப் பெற்ற அப்பெண்களின். அபாய அறிவிப்பு வரலாற்றுத்

தொகுப்பு இது. பதினைந்து கட்டுரைகளின் தொகுப்பு- இந்த ரோமாபுரி ராணிகள் என்ற நூல்.

இன்று நாம் அந்த நூலின் அருமையைப் பெருமையைச் சிறப்பை, எதிர்ப்புகளை எல்லாம் தாங்கிக் கொண்டு வெற்றி உலா வந்த மாண்பை உணர்ந்தோர் ஒரு சிலரே. நாடு மீண்டும் நாட்டுக்குக் கேடும் அழிவும் தேடிடும் நச்சு மனத்தினர், தன்னலத் திமிங்கலங்கள் தோன்றாமலிருக்க இந்நூல் அரிய வழி காட்டியாகும். உலகப்புகழ் பெற்ற பெர்னாட்ஷா, டி.எச்.எஸ்.லாரன்சு போன்றவர்களையே ஆபாச எழுத்தாளர் என்று பட்டம் சூட்டிய உலகும் பிறகு போற்றியது போன்றே அண்ணாவையும் பழித்தவர்கள்- சட்ட மன்றத்திலேயே சாடியவர்கள்கூட, அண்ணாவைத் திட்டியதால் நாட்டில் அறிமுகமாயினர் புகழ் பெற்றனர் என்றே கூறவேண்டும்.

இந்தப் பழம் பெரும் ரோம் நாட்டு வரலாற்றின் ஒரு கூறாக விளங்கும் கட்டுரை ஓவியங்களைத் தமிழகம் படித்துப் பயன் பெறவேண்டும் என்ற விழைவால், பூம்புகார் பதிப்பகம், தன்னுடைய முதற்பதிப்பாக வெளியிடுவதில் பெருமகிழ்ச்சியடைவதோடு, ஏடு படித்திடும் தமிழர் எண்ணிக்கை வளர்ந்திட உதவிடும் பணியை நினைந்து பெருமிதம் பெற்று, நூலினை வாங்கி, அறிவு வங்கியில் வைத்து நல்அகம் துலங்கிடச் செய்வீர் என்று அழைக்கிறது. வணக்கம்.

அன்புடன்

ப.ஆறுமுகம்

# உள்ளே

# ஜுலியஸ் சீசரின் மனைவிமார்

இத்தாலி, கிரீஸ், திரேஸ், மாசிடோனியா, ஸ்பெயின், பிரான்சு, பிரிட்டன், சிரியா, பாலஸ்தீன், ஈஜிப்ட், ஆப்பிரிக்கா, ஆசியா, மத்திய தரைக்கடல் தீவுகள் ஆகிய எங்கும் ரோம் சாம்ராஜ்யத்தின் வெற்றிக்கொடி ஒரு காலத்தில் கம்பீரமாகப் பறந்துகொண்டிருந்தது. எந்த நாகரிக நகரிலும் ரோம் சாம்ராஜ்ய அதிகாரி அரண்மனையில் கொலுவீற்றிருக்கவும், எந்தக் கோட்டையைச் சுற்றியும் அஞ்சா நெஞ்சினரான ரோம் நாட்டு ரணகளச் சூரர்கள் காவல் புரியவும், எந்த நாட்டு பொருளும் ரோம் நகரக் கடைவீதிகளில் குவிக்கப்பட்டும், எந்த நாட்டவர்க்கும் எஜமானர்களாக ரோம் நாட்டவர் இருந்த காலமுண்டு, ரோம் நாட்டு வீரர்களின் குதிரைப்படையின் குளம்புகளின்கீழ் சிக்கிச் சிதைந்தவர்கள் எண்ணற்றவர்கள். எத்தனையோ மண்டலங்களில் மண் குருதியுடன் கலந்து சேறாகி, புதைப்பாரற்ற பிணத்தை கழுகுகள் கொத்தித் தின்றுகொண்டிருக்க; நாற்றம் நாலாபக்கங்களிலும் வீசிக்கொண்டிருந்தது. ரோம் சாம்ராஜ்யத்தின் மதிப்பும், மணமும் இந்த நாற்றத்தையும் அடக்கிவிட்டு, மேதினியில் பரவியதுண்டு. அத்தகைய ரோம் சாம்ராஜ்யம் எங்கே?

தேய்ந்துபோன தேஜஸ் திவ்வியமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்த காலத்தில், காவலர் பல கட்டழகிகளுடன் கவலையற்று வாழ்ந்து வந்தனர். காதலைப் பொழுது போக்காகக் கொண்டு காலந்தள்ளினர். சங்கீதத்தை, சரசிகள் மீட்டும் வீணையிலல்ல அவர்களின் சதங்கை ஓசையில் கேட்டு மகிழ்ந்தனர். திராட்சை ரசப்பானத்தைப் பருகித் திருப்தி ஏற்படாது கன்னியின் கனிரச மொழிச்சுவையைப் பருகினராம்.

போக போக்கியத்தில் இங்ஙனம் புரளுமுன்னம் புரள வசதி ஏற்பட, போர்வீரர்கள் பல்லாயிரவர் தமது உயிரைப் பலிகொடுத்தனர். அத்தகைய வீரர்களின் வேந்தன் ஜுலியஸ் சீசர்!

கிரீஸ் என்றதும் எங்ஙனம் அலெக்ஸாண்டர் என்ற வீரர் நம் மனக்கண்முன் நிற்கிறாரோ, அதுபோல் ரோம் என்றதும் ஜுலியஸ் சீசர் நமது மனக்கண் முன் நிற்பான்.

ரோம் சாம்ராஜ்ய வளர்ச்சிக்காக அவன் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல. அவன் காணாத போர்களமில்லை அனுபவியாத அதிகாரம் இல்லை. அவனது புகழ் பரவாத இடமில்லை. அவனுக்கு பிற்காலத்தில் கிளம்பாத பகை இல்லை!

ரோம் சாம்ராஜ்யத்தைச் சித்தரிக்க, வாளை எழுதுகோலாகவும், இரத்தத்தை மையாகவுங்கொண்டு, பலகாலும் முயன்று வாகை சூடிய ஜுலியஸ் சீசர், வாழ்க்கையில் இன்பம் காணவும் போர் புரியவேண்டி

நேரிட்டது.

அவனுக்கு நாலு மனைவிமார்! இரண்டாம் மனைவியும் நாலாவது மனைவியும் அவனுக்கு நற்குணவல்லிகளாக அமைந்தனர். நாலாம் மனைவியின் அழகும் அவனது புகழும் ஒருங்கே ஓங்கி வளர்ந்தன, சதியால் அவன் சிதைக்கப்பட்டான். விதவைத் தன்மை அவனது அழகை கவர்ந்தது. மனமொத்த நல்வாழ்வு அவர்களுடையது, முதல் மூன்றும் எப்படி? சீசரின் அந்தரங்கக் காரிகையின் முழுப் படத்தைக் கண்டால்தான், நாலாந்தாரமாக வந்த நாயகியின் நற்குணம் நன்கு விளங்கும்.

எத்தனையோ காளைகளில் ஒருவராக ஜூலியஸ் சீசர் இருந்த பொழுதே கல்யாணம் ஆகிவிட்டது. கல்யாணம் செய்துவைக்கப்பட்டது என்பதற்கும், செய்துகொண்டான் என்பதற்கும் எவ்வளவோ வித்தியாசம்! அதைக் குடும்பங்கள் பல எடுத்துக்காட்டும். கூர்ந்து நோக்குவோருக்கு கஸ்டியா என்ற கன்னிகையை சீசர் மணந்து கொள்ளும்படி நேரிட்டது. பெரியவர்களின் ஏற்பாட்டினால், சீமான் வீட்டு சிங்காரி என்றபோதிலும் சீசருக்கு அவள் செந்தேனாக இல்லை. எனவே, சீசர் சுயமாகக் காரியம் செய்யும் சுபாவம் பெற்றதும் கஸ்டியா என்ற தனது முதல் மனைவியை விலக்கிவிட்டான். அக்காலத்தில் புகழும் செல்வாக்கும் பெற்று விளங்கிய சின்னா என்பவரின் மகள் கர்னீலியா என்பவள்மீது காதல் கொண்டான். கடிமணம் நிறைவேறியது.

காதல் பாதை கரடு முரடானது என்பவர் கவிஞர். சீசர் தானாக அமைத்துக்கொண்ட காதல் பாதையில் பயங்கரப் பள்ளங்கள் காணப்பட்டன. பெற்றோர் உண்டாக்கினதல்ல; பெண் வீட்டார் ஏற்படுத்தியதுமல்ல! அரசியல் சூழல் ஏற்படுத்திய பள்ளம் அது ஜூலியஸ் சீசர் அக்காலத்தில் ரோம் நாட்டு ஆட்சிக் குழுவில் ஆறாவது ஏழாவது பேர்வழி, சல்லா என்ற வீரனுக்கே விருதுகள் அதிகம். அவன் குறுக்கிட்டான். சீசரின் காதலில் சீசருக்கும். சல்லாவுக்கும் பகைமை கிடையாது. ஆனால் சல்லா மன்னிக்க முடியாத பெருங்குற்றத்தை சீசர் செய்து விட்டான். குற்றம் யாது? எந்த சின்னாவை சல்லா தனது ஜென்ம விரோதி என்று கருதிக்கொண்டிருந்தானோ அதே சின்னாவின் மகளைச் சீசர் மணம் புரிந்து கொண்டது குற்றம்! கர்னீலியாவை நீக்கிவிடும்படி சல்லா வற்புறுத்தலானான். எப்படி எங்கிருந்து நீக்குவது? நெஞ்சில் புகுந்த நேரிழையாளை சீசர் நீக்கிவேண்டுமானால் நெஞ்சையே நீக்கவேண்டும்! சல்லாவின் சீற்றம் பயத்தைக் கொடுத்தது. ஆனால் கர்னீலியாவிடம் அவன் கொண்டிருந்த காதல், பயத்தை விரட்டியடித்தது. மேலும் தனது மகளின் மானத்தை மங்கவைக்க

மருமகன் துணிந்தால் சின்னா சீறுவான். சின்னாவின் சீற்றம். சல்லாவுடையதைவிடக் குறைந்த ஆபத்துடையதென்று கூறமுடியாது இரு பக்கம் இரு நெருப்புக்கள்! இடையே குளிர்ந்த முகவதி கர்னீலியா, அவளுடன் கூடிக்களித்து, இரு ஜ்வாலையையும் இலட்சியம் செய்யாது சீசர் சிலகாலம் வாழ்ந்து வந்தான். ஆனால் சல்லாவின் கோபத்தால் சாய்க்க முடியாத சதிபதிகளின் தோழமையை மரணம் துண்டித்துவிட்டது.

கர்னீலியா மறைந்தாள். சீசர் கலங்கினான், கதறினான், ஊரார் முன்னம் சீசர்! தனது உள்ளத்தில் கொந்தளித்த எண்ணங்களை எடுத்துரைத்தான். ஆரணங்கை இழந்ததால் ஆழமான வடு அவனது நெஞ்சில் ஏற்பட்டது. அதனை மாற்ற சல்லா தனது உறவினனான பாம்பேயஸ் ரூபஸ் என்பவரின் மகள் பாம்பேயா என்ற மங்கையைக் கருவியாக்க நினைத்தான். பாம்பேயா சீசரின் மனைவியானாள். மனைவிக்குச் சொந்தக்காரியானாலேயன்றி சீசரின் மனதுக்குச் சொந்தக்காரியாகவில்லை. கீர்த்தியும் செல்வாக்கும் பெற்ற அந்தக் குடும்பத்தில் எவ்வளவு கோணல் வளர்ந்தது என்பதைக் கூறுவோம்.

ஜூலியஸ் சீசரின் மூன்றாந்தாரமாக வந்த பாம்பேயா அவனது வாழ்க்கைக்கு செந்தேளானாள்! மணந்தது சீசரை! ஆனால் அவளது மனம் நாடியது வேறொரு இளைஞனை! அவன் அழகன்; ஆனால் ஆபாச நடத்தைக்காரன். கிளாடியஸ் என்ற அந்தக் காமுகன். தன் கட்டழகாலும் படாடோபத்தாலும் பாம்பேயாவின் மனதைப் பாகாக உருக வைத்துவிட்டான்; அவனது நினைவால் பாம்பேயாவின் உடல் இளைத்தது. அவளது உள்ளத்தில் ஊன்றியிருந்த வஞ்சகம் வளர்ந்தது. கிளாடியஸை அடையவேண்டுமென்ற கவலை கொண்டவளாய், பாங்கியைப் பக்குவப்படுத்தினாள். இதற்குள் காமச் சேட்டையில் கைதேர்ந்த கிளாடியஸ் எப்படியேனும் பாம்பேயாவைப் பெறவேண்டுமென்று சூழ்ச்சிகள் செய்துவரலானான்.

கர்னீலியாவிடம் இருந்த கவர்ச்சியை சீசர் பாம்பேயாவிடம் காணமுடியவில்லை. ஆகவே சீசர், மேலும் மேலும் ரோம் நாட்டு அரசியல் விவகாரத்தில் தனது செல்வாக்கைப் பெருக்கிக் கொள்வதில் காலந்தள்ளிவந்தான். நல்ல சமயம் இதுவென்று எண்ணி கிளாடியஸ் கள்ளக்காதலுக்குத் தூபமிட்டுக் கொண்டிருந்தான். இருவரின் இயல்பும் நன்கு தெரிந்த சீசரின் தாயாராகிய நரைமூதாட்டி, பாம்பேயாவின் போக்கைச் சர்வ ஜாக்கிரதையாக கவனித்து வந்தாள். அவளது கண்கள் பாம்பேயாவின் மனதிற்குள் வளர்ந்து வரும் சூதான எண்ணங்களைக்கூடத் தெரிந்துக்கொள்ளக் கூடிய கூர்மையானவை களாயிருந்தன! இந்தத் தடை பாம்பேயாவின் தாபத்தை அதிகப்

படுத்திவிட்டது; தத்தளித்தாள்; அந்நாளில் மாதர்கள் மட்டுமே கொண்டாடும் திருவிழாவொன்றுண்டு. கேளிக்கையும் விருந்தும், மாளிகைக்குள் நடக்கும்' ஆடவர் அனுமதிக்கப்படுவதில்லை. அந்த விழா பாம்பேயா மாளிகையில் நடந்தது. பாங்கியின் துணை கொண்டு கிளாடியஸ் பெண் வேடம் புனைந்து கொண்டு, மாளிகைக்குள் சென்று மாதரோடு மாதராகக் கலந்து இருந்தான், பாம்பேயாவிடம் பாங்கி இந்த ஆனந்தச் செய்தியைக் கூறச்சென்றாள். ஆவலோடு பாம்பேயா சர்வ அலங்காரங்களுடன், காதலன் வரவுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். மாமியின் கண்களில் மிளகாய்பொடி தூவி விட்டோம். மனதுக்கிசைந்த மணாளனிடம் கொஞ்சிக் குலாவலாம் என்று மனப்பால் குடித்துக்கொண்டிருந்தாள்.

அவசரக்காரன் ஆத்திரத்தில் அழிவது திண்ண மன்றோ! கிளாடியஸின் கண்கள், மாளிகையின் மூலைமுடுக்கெல்லாம் பாய்ந்தன. எங்கே பாம்பேயா, ஏன் இன்னும் காணோம். செய்தி சொல்லப்போன பாங்கி எங்கே என்று எண்ணி, துடிதுடித்துக் கொண்டிருக்கையில், விழாவில் கலந்திருந்த ஒரு மங்கை, ஏதோ வினவ சூதுக்காரக் கள்ளன் வேடத்தை மறந்து. சுயகுரலில் பதில் கூற, மங்கை, "ஆண்! யாரோ ஆடவன் பெண் உடையில் நுழைந்துவிட்டான்" என்று அலறினாள். விருந்து மண்டபத்தில் அமளி விளக்குகள் பல கொண்டுவரப்பட்டன. விபரீதம் நேரிட்டதை உணர்ந்த பாம்பேயா சாமார்த்தியமாக அவ்விடம் வந்தாள். காமத்தால் கண் மயங்கிக் கிடந்த கிளாடியசை இழுத்துக்கொண்டு போய் ஒரு அறைக்குள் போட்டு மூடிவைத்தாள்.

உலகை தனது வீரத்தால் நடுங்க வைத்த சீசரின் மனைவியின் செயல் இது.

மாமி மகா கெட்டிக்காரி, மாளிகை பூராவும் தேடினாள், மைவிழியாள் போல் வேடமிட்டுக் கிடந்த குடிகேடனைக் கண்டு பிடித்தாள், ரோம் நகர் முழுவதும் இந்த ரசபாசம் தெரிந்துவிட்டது. கிளாடியஸ்மீது குற்றஞ்சுமத்தப்பட்டது. பல சாட்சிகள் அவனது குற்றத்தை மெய்ப்பித்தனர். ஆனால் ராஜாங்கத்தில் அவனுக்கிருந்த செல்வாக்கினால் அவன் தண்டிக்கப்படவில்லை.

சீசரின் நிலை என்ன? வதந்தியைக் கேட்டு அவன் வதையவில்லை. தனது மதிப்புக்கு கறை ஏற்பட்டதே என்ற அளவுக்கு வருத்தம் இருந்ததே தவிர, நெஞ்சுத் துடித்தவனாகக் காணப்படவில்லை. "பாம்பேயா பழியேதும் செய்திலள்; எனினும் சீசரின் மனைவிமீது சம்சயம் ஏற்படவும் இடமிருத்தல் கூடாது எனவே அவள் இனி என் மனைவியாகாள்" என்று சீசர் கூறிவிட்டான். பசப்புக்காரி பாம்பேயா விலக்கப்பட்டாள்.

மூன்றாந்தாரத்தால் வந்த "வினை' போகவும், கர்னீலியா காலத்திலே அடைந்து, பின்னர் இழந்த இன்பத்தைச் சீசர் பெறவும் மார்க்கம் கிடைத்தது. ரோம் நாட்டு மன்னர் பரம்பரையிலுதித்த பரிமளவல்லி கல்பூர்ணியா என்றோர் கன்னிகைமீது சீசர் காதல்கொண்டு கடிமணம் புரிந்துகொண்டான். கல்பூர்ணியா, தனது இளமை, அழகு, அன்பு, அறிவு, பண்பு ஆகியவற்றால், சீசருக்கு மகிழ்ச்சியூட்டி, அவனது வாழ்க்கையின் அமிர்தமாக விளங்கினாள். அவனது காலத்தில் சீசரின் காதல் வாழ்க்கை கதிர்விட்டுப் பிரகாசித்ததுபோல் அரசியல் வாழ்வும் அளவற்று வளர்ந்தது. ரோம் நாட்டின் ஈடு எதிர்ப்பில்லாத தலைவனானான். மணிமுடி அவனது காலடியில் கிடந்தது, அவனது சொல்லே சட்டம், புன்சிரிப்பே பரிசு! ஆனால் உச்சநிலை அடைந்த சீசரை, உடனிருந்தே வீழ்த்த பாதகன் புரூடஸ், பழிக்கஞ்சாப் படைதிரட்டி, ரோம் சாம்ராஜ்யம் சபா மண்டபத்துக்கு சீசர் போகும் வழியில் குத்திக் கொன்றான். புரூடசின் பாதகச் செயலுக்குப் பலகாரணங்கள் கூறப்பட்டன. அவைகளில் ஒன்று பெண்ணால் வந்த வினையாகும். புரூடசின் தாயாருக்கும், சீசருக்கும் கள்ளக்காதல் உண்டு என்றும், புரூடசின் துவேசத்துக்கு அஃதோர் காரணமென்றும் கூறுவர்.

சீசரின் முடிவு கண்ட கல்பூர்ணியா, காலம் தனக்கு செய்த கேட்டை எண்ணினாள், கசிந்துருகினாள்! பின்னர் "அரண்மனை, அலங்காரம் அந்தஸ்து வேண்டேன்" என்று கூறிவிட்டு, செல்வத்தில் ஓர் பகுதியை அந்தோணி எனும் சீசரைச் சிதைத்தவரைச் சிதைக்குமாறு கூறினாள். கல்பூர்ணியாவின் எண்ணம் பின்னர் ஈடேறியது.



# லிவியாவின் லீலைகள்

அழகு ஓர் ஆபத்தான ஆயுதம்! ஆனால், பெண்களுக்குச் சரியான சமத்துவமும், சுதந்திரமும் பண்பும், வசதியும் கிடைக்கும்வரை, அவர்கள் இந்த ஒரே ஆயுதத்தை உபயோகித்தே தீரவேண்டியவரா கிறார்கள். அந்த நிர்பந்தம் நீங்கிய பிறகுதான், அழகு ஆயுதமாகவோ ஆபத்தாகவோ இராமல் இன்பக் காட்சியாக இருதய கீதமாக இருக்கமுடியும். போர்வீரன் தனது வாளின் கூர்மையாலும் அதைவிடக் கூர்மையான தனது திறமையாலும் எங்ஙனம் பலருடைய இருதயங்களைக் குத்திக்கொன்று, பின்னர் தனது கீர்த்தியை நிலை நாட்டிய பிறகு எங்ஙனம் உலகம் அவனைப் போற்றியும் புகழ்ந்தும், அவன் ஆணைக்கு அடங்கியும், அன்புக்கு ஏங்கியும் கிடக்கிறதோ, அதுபோல், ரோம் சாம்ராஜ்யத்து ராணிகள் தங்கள் அழகை ஆயுதமாகக் கொண்டு வீரரை, ராஜதந்திரிகளை, இளவரசரை, மன்னரைத் தாக்கி, பலரை வீழ்த்தி, ஒருவரைத் தழுவி கீர்த்தியும் கித்தாப்பும் தம்மை வந்து தழுவும்படிச் செய்து சாம்ராஜ்யத்தை ஆட்டிப்படைத்தனர். செங்கோல் அவர்களின் சிறு விரலே! பட்டாளங்கள் அவர்களின் பாய்ச்சிகை! படைத் தலைவர்கள் அவர்களின் பதுமைகள்! அவ்வளவு செல்வாக்கைப் பெற்றனர். தமது சிங்காரத்தை ஆயுதமாகக்கொண்டு, அந்த அணங்குகள். ஆடவருடன் அந்நாளில் போர் புரிந்தபோது, அந்நாளிலென்ன; இந்நாளில் மட்டுமென்ன; "வேல் விழியால் எந்தன் விலாப் புறத்தைக் கொத்தாதே" என்கிறார் கவி பாரதிதாசன்!

போர் வீரனின் வாள் வீச்சினால் தலை உருளமுண்டம் கீழே வீழ்வதுபோல், அந்தக் காமவல்லிகளின் கணைகள், எவ்வளவோ பேரின் கதியைக் கீழே சாய்த்ததுண்டு, மதியை மாய்த்ததுண்டு, சதிகளுக்குச் செவிலித் தாயானதுண்டு, புரட்சிகளை மூட்டியதுண்டு.

அத்தகைய காலத்தில் வாழ்ந்த லிவியா எனும் ராணியின் ரசமான வரலாறு இது. லிவியாவின் வாழ்க்கை இரண்டு பகுதிகள் கொண்டது, முதல் பகுதியே இப்போது தீட்டப்படுவது. இரண்டாம் பகுதியில் லிவியா, ரோம் சாம்ராஜ்யத்தைத் தனது உள்ளங்கையில் வைத்துக் கொண்டது போன்ற அளவு அதிகாரம் பெற்றாள். அது பிறகு எழுதுவோம்.

லிவியா, கண்கவரும் வனப்புள்ளவள் என்று கூறத்தேவையில்லை. அழகில்லா அணங்கு, புகழில்லா ஆடவன், கற்பனைத் திறமில்லாத கவி, பாதகத்துக்கு அஞ்சும் ராஜதந்திரி, போகத்தில் புரளாத பிரதானியர், பொய்யுறைக்கத் தெரியாத சேடிகள் ஆகியோருக்கு ரோம் சாம்ராஜ்ய

சபா மண்டபங்களிலே இடமே கிடையாது. லிவியா, முகிலைக் கிழித்துக்கொண்டு வெளிவந்து இன்ப உலகில் இடம்பெற்றவள். அழகு, அறிவு, அந்தஸ்து, அலங்காரம், அபிநயம், அடங்காத ஆசை, இவைகளின் கூட்டுச்சரக்கு லிவியா. வானவில்லில் பலவகை வர்ணங்கள் இருந்து வனப்புடன் விளங்குவதுபோல். லிவியாவிடம் பலப்பல குணங்கள் உண்டு. லிவியாவுக்கு வினயமும் தெரியும் வீறிட்டெழவும் தெரியும்! கல்விமிக்கவள்; கவர்ச்சி ஊற்று; லிவியாவினிடம் பாசாங்கும் உண்டு; பிரதாபமும் உண்டு; இத்தகைய விசேட விருதுகளைத் தாங்கிக்கொண்டு உலவினதால், லிவியா ரோம் சாம்ராஜ்ய சக்கரவர்த்தியான அகஸ்டஸ் எனும் ஆணழகனின் பிரேமாவதியானாள்.

அகஸ்டஸ், அதிகாரத்தில் மட்டுமல்ல அரசன் அழகிலும், அரிய போர்த் திறத்திலும், ரோம் நாட்டு வாலிபர் உலகிலும் அவனே அரசோச்சினான். ஆஜானு பாகுவான அவனது தோள் வலிமைபற்றி, தோழியர் உரைக்கக் கேட்டு, தூக்கத்தை மறந்த தோகையர் பலர். சுருண்டு வளைந்த கேசம், பரந்து விளங்கி, மேலும் குணம்படைத்த கண்கள், அவைகளிலே விண்மீன்களுக்குள்ள ஜொலிப்பு இவற்றுடன் அகஸ்டஸ் உள்ளப் பண்பும் கொண்டவன். அவனே லிவியாவுக்கு ஏற்றவன் என்று கூறாதாரிலர்.

அகஸ்டஸின் அல்லியாக லிவியா அமைந்த பிறகு, முதலிலே விலியா மாலையிட்டது மன்னனை யல்ல; வேறோர் மதிப்பு வாய்ந்த சீமானை.

லிவியாவைப் போன்றே பெருங்குடியில் பிறந்து பெருந்தன்மை வாய்ந்தவனாக விளங்கிய டைபீரியஸ் கிளாடியஸ் நீரோ என்பவனை லிவியா மணஞ்செய்து கொண்டு வாழ்ந்து வந்தாள். அவளது அழகு பற்றி மாளிகைகளிலும், மலர்ச் சோலைகளிலும் பேசப்பட்டு வந்ததென்றபோதிலும், அகஸ்டஸின் காதுகளுக்கும், கண்களுக்கும் வேறு வேலைகள் இருந்தனவாகையால், லிவியா, டைபீரியஸ் நீரோவுடனே காலந்தள்ளி வந்தாள். மிகமிக உயர்ந்த ஸ்தானம் பெற வேண்டும் என்ற பேராசை கொண்ட லிவியா, சாதாரணச் சீமானிடம் சிறைபட்டதாகக் கருதிக்கொண்டு விடுதலை தினம் விரைவில் வருமென்றே காத்துக் கொண்டிருந்தாள். கணவனிடம் அன்புடனேயே நடந்துகொண்டாள். அவனது கஷ்ட நஷ்டங்களில் பங்கும் கொண்டாள். ஆனால் மேல் வேலைக்குப் போகும்வரை, இருக்கும் உத்தியோகத்தில் கடமை தவறாது இருக்கும் அதிகாரிபோல், லிலிவியா நடந்து கொண்டாள் என்றே கூறுவோம்!

அந்தப்புறத்துச் செய்தி கிடக்கட்டும். அரசியலைக் கவனிப்போம். ரோம் ரணகளமாகிக் கிடந்த காலம். ஜூலியஸ் சீசரின் மரணத்துக்குப் பிறகு ரோம் நாட்டு தலைவர்களால் அந்தோனியும், ஆக்டேவியஸ் என்ற குடிப்பெயரும் அகஸ்டஸ் என்ற பட்டப்பெயரும் கொண்ட ஆற்றல்மிக்கவனும், லெபிடஸ் என்பானுமாக மும்மூர்த்திகள் கிளம்பினர். இவர்களின் கூட்டாட்சியின்போது நடந்த கொலைகள், சித்திரவதைகள் சொல்லுந்தரத்தக்கதல்ல. புகழ்வாய்ந்த பிரசங்கி சிசிரோவின் தலை வெட்டப்பட்ட காலம்; யார் தலைக்கு எந்த விநாடியிலே ஆபத்து வருமோ என்று, தலை படைத்தோர் யாவரும் எண்ணித் தத்தளித்துக் கொண்டிருந்த பயங்கரமான நாட்கள்.

அத்தகைய கோரத்திற்குப் பிறகு லெபிடஸின் சீட்டு கிழிக்கப் பட்டது. இருவரே இருந்தனர் போட்டிக்கு, அகஸ்டஸ் ரோமில் அரசோச்சி வந்தான். அந்தோனி, ஈஜிப்ட் நாட்டில் கட்டழகி கிளியோபாட்ராவின் காலடியில் வீழ்ந்து கிடந்தான். ரோமில் அகஸ்டஸுக்கும் அந்தோனியின் மனைவிக்கும் விரோதம் மூண்டது. ஊர் இரண்டு பட்டது! அகஸ்டஸின் கரம் வலுத்தது, அந்தோனியின் ஆட்கள் மனைவி உள்பட ரோம் நகரை விட்டே ஓடிவிட்டனர்.

இந்தக் கொந்தளிப்பும் இயல்பாக உண்டானதல்ல, இங்கும் லீலா விநோதத்தின் சேட்டைதான்.

அந்தோனி கிளியோபாட்ராவினிடம் காமுற்றுக் கருத்திழந்து கிடந்தபோது அவனது மனைவி புல்வியா என்பவள் ரோம் நாட்டில் புலம்பிக்கொண்டு கிடந்தாள். ஈஜிப்ட் நாட்டு ராணியின் புகழ் புல்வியாவின் செவியைத் துளைத்து, சிந்தனையைக் குழப்பிவிட்டது. கணவன்மேல் கடுங்கோபம் கொண்டாள். பழிவாங்கத் துடித்தாள். அதற்கோர் பாதகத் திட்டமும் கண்டாள்!

என்னை மறந்து வேறு மங்கையுடன் கூடிக் குலவிடும் என் கணவன் மீது பழிதீர்த்துக் கொள்ள நானோர் கள்ள புருஷனைத் தேடியடைவேன். அவனுடன் காலந் தள்ளுவேன். அதுகேட்டு அந்தோனியின் மனம் வேகட்டும், மதிமருளட்டும், கதி கொட்டடும் என்று தீர்மானித்தாள் புல்வியா தூதுவிட்டாள் அகஸ்டஸுக்கு!

அகஸ்டஸ் புல்வியாவின் மகளின் கணவன்! புல்வியாவின் முதல் புருடனுக்குப் பிறந்த பெண்ணைத்தான் அகஸ்டஸ் மணந்து கொண்டான். மாமிவிட்ட தூதுகேட்டு வயிறு வெடிக்கச் சிரித்த மருமகன், அவளைக் காரித்துப்பினான்! மகளும் வேண்டாமென்று ரைத்துவிட்டு வேறொர் மங்கையை மணந்துகொண்டான். புல்வியாவின் தாபம் பற்றியும், அகஸ்டஸ் அவளை அலட்சியம் செய்தது பற்றியும்

ஊரிலே கேலியும், கிண்டலும் அமோகமாயிற்று. புல்வியா தனது படையைத் திரட்டிக்கொண்டு அகஸ்டஸை எதிர்த்து ஒழித்துவிட முனைந்தாள். ஆனால் அவளுடைய கட்சி பலங்குன்றிக் கிடந்தது. அவளும், அவளைச் சார்ந்தோரும் ஓடிவிட நேர்ந்தது.

அதுசமயம், லிவியாவும் அவள் கணவனும் அகஸ்டஸின் படைகளுக்குத் தப்பி சொல்லொணாக் கஷ்டங்கள் அநுபவித்து வேற்றூர் போய்ச் சேர்ந்தனர். அகஸ்டஸின் கோபம் லிவியாவை ரோம் பிரதேசத்தை விட்டே ஓடச்செய்தது, பின்னர் அதே அகஸ்டஸின் நேசம், அவளை ரோம் சாம்ராஜ்ய அரசியாக்கியது.

பொல்லாங்கு எண்ணிய புல்வியா, கணவனின் காதைப் பிடித்திழுத்து வருவேன் என்று கூறிக்கொண்டு ரோம் நகரை விட்டுச் சென்றவள் மீண்டும் ரோம் வரவில்லை. காலம் அவளை கல்லறைக்கு இழுத்துச் சென்றுவிட்டது.

அவள் இறந்ததும், அந்தோணி, அகஸ்டஸ் பகைமையும் இறந்தது, இருவரும் கை குலுக்கிக்கொண்டனர். கை குலுக்குடன் நிற்கவில்லை. அந்தோனி அகஸ்டஸின் தங்கை ஆக்டேவியா என்பவளை கல்யாணம் செய்துகொண்டான். சமரும் பெண்ணாலே, சாந்தமும் அவளாலே!

இரு தலைவர்கள் ஒன்றுபட்டதையொட்டி விமரிசையாக விழாவொன்று நடத்தினான் அகஸ்டஸ். அகஸ்டஸுக்கு அஞ்சி ஓடிப்போனவர்கள் திரும்பி ரோம் வந்தனர். லிவியா தம்பதிகளும் திரும்பிய திருக்கூட்டத்தினரே! விழாவிலும் விருந்திலும் லிவியாவுக்கு இடங்கிடைத்தது. அகஸ்டஸ் லிவியாவை விருந்தில் கண்டான். அவளது அழகு அவனை அடிமையாக்கி விட்டது.

"உன்னைக் கண்டதும் குதூகலத்துடன் நடனமாடும் அந்தக் கண்கள் அந்நாளில் உன் பெயரைக் கேட்டதும் எவ்வளவு மிரட்சி அடைந்தது என்பதை அறிவீரோ! மலர்க்கரமென நீர் புகழும் இந்த எனது கரங்களில், நீர் விலங்கிட வன்றோ முன்னம் தேடினீர். அன்று தூக்கு மேடைக்கு வாவென அழைத்தீர். இன்று மணப்பந்தலுக்கு அழைக்கிறீர். அன்று அதிகாரத்தின் ஆர்ப்பரிப்பு! இன்று அன்பின் பதைப்பு! அகஸ்டஸ்! காலம் எப்படி மாறிவிட்டது பார்!" என்று லிவியா லலிதமாகப் பேசி அகஸ்டஸின் உள்ளத்தில் மூண்ட காதல் தீயைத் தூண்டி விட்டாள்.

அகஸ்டஸின் அழகு ஈடில்லாதது. அதிகாரம் இணையற்றது. அன்பு குறைவற்றது. லிவியா அகஸ்டஸின் மனைவியாகச் சம்மதித்தாள். அகஸ்டஸ் லிவியாவின் கணவனையே கூப்பிட்டு, "உன் மனைவியை நான் மணம் புரிந்து கொள்ளவேண்டும். அவளன்றி நான் வாழேன்

எனக்கு உயிர்ப் பிச்சை தா" என்று வினயமாகக் கெஞ்சினானோ, அன்றி விரட்டினானோ தெரியாது. எப்படியோ, அகஸ்டஸ் லிவியாவின் புருடனின் சம்மதத்தைப் பெற்றான். திருமணப்பந்தலுக்கு லிவியாவை அழைத்துவந்து அகஸ்டஸின் கரத்தில், டைபீரியஸ் நீரோவே ஒப்புவித்தான். மணவிருந்தில் மகிழ்ந்து கலந்துகொண்டான். தனது மாஜி மனைவி பட்டமகிஷியாவது பற்றி அவன் பெருமையும் பூரிப்பும் கொண்டவன் போலவே காணப்பட்டான். இந்த ரகத்தை என்ன பெயரிடுவது! ரோமில் தவிர வேறு எங்கு காண்பது!

தாமரைப்பூத்த குளம் அதன் மருங்கே பழமுதிர்ச்சோலை; மற்றோர்புறம் வாசமலர்த் தோட்டம், அதையொட்டிச் சிற்றாறு; இவைகளைப் புறத்தே கொண்ட மனோகர மாளிகை; அதற்கோர் அலங்கார உப்பரிகைமீது உயிருள்ளனவோ வெனச் சந்தேகிக்கத் தக்கதான உன்னதச் சிலைகள். சிலைகளின் உடலிலே, தகதகவென தங்கம்போல் பிரகாசிக்கும் ஆடைகள்; அந்த ஆடைகளைக் கண்டு மயங்கி மேலே தத்தி விளையாடும் பஞ்சவர்ணக்கிளிகள்; "கிளிகளைப் பிடிப்போம் வாரீர்" என்று பாங்கியாரை குயிற் குரலாற் கூவி அழைத்து அன்னமென நடந்துசென்று கிளி பிடிபடாததால், "பறந்தனவே பஞ்சவர்ணக்கிளிகள்" என்று பாங்கியரிடம் கூறத் திரும்பி நோக்கும் நீலவிழியாள் முன்பு, நீண்ட புகழும் நெற்றியில் இரு விண்மீன்களும் கொண்ட ஆடவன், "அவை போனாலென்ன, என்னைப்பிடி" என்று கொஞ்ச, "பிடிக்க இயலாதோ?" என்று குறும்புத்தனத்துடன் கூறி அவனைத் தாவிப் பிடிக்க முயன்று முடியாதுபோய், துவளும் கொடிபோல் சாய அவளை உடனே மார்பில் சாய்த்துக்கொண்டு "வலி இங்கோ, அங்கோ?" என்று உசாவுபவன்போல் பாசாங்கு செய்து: மார்புறத் தழுவி, கன்னத்தில் முத்த...

ரோம் சாம்ராஜ்யத்து வீரர்கள் போரிடும் நேரம். அதிகார போட்டியில் ஈடுபடும் நேரம் போக, மற்றைய நேரத்திலே இந்த நாடகமே ஆடினர்; இவ்வளவுக்கும் இதற்கு மேற்பட்ட நவரச நாடகங்களுக்கும் இலாயக்கான சல்லாபிகள் சாம்ராஜ்யத்தில் இருந்தனர், அவர்களில் சிலர் தமது கணவன் வாழ்க்கையில் போக போக்கியங்களை அனுபவிக்க வசதிகள் செய்து கொடுத்துவிட்டால் போதுமென்றிருந்தனர். சிலர் முற்றும் தமக்கே உரித்தானவராகத் தமது மணாளர் இருத்தல் வேண்டும் என்றிருந்தனர். வேறு சிலர் "ஆடவர் வண்டுகள்; பெண்ணினம் மலர்; தேன் கண்ட இடத்தில் வண்டு உலவும்" என்று மதன சாஸ்திரம் பேசி மனத்தைத் தேற்றிக் கொள்வர், ஒரு சிலர் "அலங்காரம், போகம், இவை இருந்தால் மட்டும் போதுமா? ஆண்களுக்குள்ள அதிகாரம் நமக்கும் வேண்டாமா?" என்று

எண்ணுந்துணிவுள்ளவர். அவர்கள் தமது கணவன்மார்கள் பெறும் அதிகாரம் அந்தஸ்து, புகழ், பரிசு ஆகியவற்றில் தமக்குச் சரியான பங்கிருக்க வேண்டுமென்று விரும்பி அதற்கான சாகசம் செய்வர், மற்றும் சிலருண்டு "மக்களுக்கு மன்னன். ஆனால் எனக்கு அவர் மணாளன்; மக்களுக்கு அவர் சொல் சட்டம், அவருக்கோ என் சொல் சட்டம்" என்று மகிழ்வோடு கூறிப்புருடனைப் பதுமைபோல் ஆட்டி வைக்க வேண்டும் என்ற ஆசை கொண்டவர். அது நிறைவேற ஆயிரம் தந்திரங்களைக் கற்றுத் தேறினவர்கள். அத்தகைய அல்லிக் கூட்டத்தவள் அகஸ்டஸின் மனைவி அழகி லிவியா.

சீசரின் வீட்டுச் சிங்கார மாளிகையைத் துறந்து மன்னனின் அரண்மனை புகுந்ததும், லிவியா, "அகஸ்டஸ் ரோம் சாம்ராஜ்யத்தை ஆளட்டும் நான் அகஸ்டஸை ஆள்வேன்" என்று மனதில் தீர்மானித்துக் கொண்டாள். யாருக்கும் அஞ்சா அகஸ்டஸ் அவள் அழகுக்கு அஞ்சினான். போர்க் களங்களிலே கலங்காத அகஸ்டஸ் அந்தபுரத்திலே நுழைந்ததும் அடங்கிவிடுவான்! எந்த நாட்டுக் காவலருக்கும் வணங்காத அவனது சிரம் லிவியாவின் முன்பு பன்முறை வணங்கிற்று! அவளிடம் அகஸ்டஸ் அவ்வளவு சொக்கிக் கிடந்தான்.

ரோம் நாட்டு இரணகளச் சூரர்களில் பலர் இங்ஙனம் பஞ்சணைப் பதுமைகளிடம் தமது பிரதாபம், பரிபாலனம், புகழ், சக்தி, எதிர்கால வாழ்வு முதலியவற்றை அடகுவைத்துவிட்டு, மீட்டுக்கொள்ள முடியாமலும் திண்டாடினார்கள். ஜெகமஞ்சப் போரிட்ட ஜூலியஸ், கிளியோபாட்ராவினிடம் குழந்தைபோல் விளையாடிக் கிடந்தான். அந்தோணியும் அதேகதி, அகஸ்டஸோவெனில், லிவியாவிடம் கட்டுண்டு கிடந்தான்.

ரோம் சாம்ராஜ்யத்தில் லிவியாவின் ஆணை புகாத இடமோ, நேரமோ கிடையாது. ஆம்! அகஸ்டஸின் நெஞ்சிலே புகுந்து கொண்டவளால், வேறு எங்கு புகுந்து ஆட்சி செலுத்த முடியும்! மக்கள் தன்னைப் புகழ்ந்து வாழ்த்தி வணங்கும்படி, அடக்கமும் அன்பும் கொண்டவளென்று யாவரும் நம்பும்படி நடந்தாள் லிவியா.

லிவியாவை அவளது முதல் புருடனிடமிருந்து விலகச் செய்து, தனக்குரிமையாக்கிக் கொண்ட அகஸ்டஸ், ரோம் சாம்ராஜ்ய அதிகாரத் துறையிலும் தன்னுடன் பங்கு பெற்று அதிகாரம் செலுத்தி வந்த பாம்பே எனும் படைத்தலைவனையும், தங்கை புருடனும் கிளியோபாட்ராவின் காதலுனுமான அந்தோனியையும் போரில் வென்று புறத்தே ஒதுக்கித் தள்ளி விட்டு ரோம் சாம்ராஜ்யத்துக்கு ஈடு எதிர்ப்பில்லாத தனி ஆட்சியாளனானான். தனது பட்டமகிஷியான லிவியாவுக்கு

நாட்டாரனைவரும் நன்மதிப்புத்தர வேண்டுமென்பதிலே அகஸ்டஸ் மிக்க அக்கறையுடன் பாடுபட்டான். தனக்கு எத்தகைய விருது அளிக்கப்படுகிறதோ அது லிவியாவுக்கும் தரப்பட வேண்டுமென்று கட்டளையிட்டான். அவள் மனமகிழ எதுவும் செய்யச் சித்தமாயினான். அவளும் அதற்கேற்பவே நடந்துகொண்டாள். அகஸ்டஸுக்குத் தன்மீதுள்ள அன்பு அணுவளவும் குறையாதபடி பார்த்துக் கொண்டாள். அவன் குணமறிந்து குறிப்பறிந்து நடந்துகொள்வதிலே மகாகெட்டிக்காரி லிவியா.

அகஸ்டஸ், சிற்சில சமயங்களில், தர்பாரில் நடமாடும் தளுக்கு சுந்தரிகளைத் தேடி அலைவான். லிவியா கோபித்துக் கொள்வதில்லை; பொறாமைப்படுவதில்லை. ஏனெனில், தேர் திரும்பி நிலைவருதல்போல், அகஸ்டஸ் எப்படியும் தன்னிடமே வந்து சேருவான் என்ற தைரியம் அவளுக்குண்டு, வந்து சேரச் செய்யும் வழியும் கற்றவள். ஆகவே அகஸ்டஸ்மீது கோபிப்பதில்லை. கண்டுங் காணாதவள்போல் இருந்து விடுவாள். சில சந்தர்ப்பங்களில், "சரி நடத்துங்கள், உங்கள் இஷ்டம் போல்" என்று தமாஷ் செய்வாள். அகஸ்டசுக்கு உல்லாசம் தேவை. அதை அவன் எவ்விதத்தால் பெற்றுக் கொள்வதானாலும், அதற்கு குறுக்கே நிற்கக்கூடாது என்பது லிவியாவின் கருத்து. இந்தத் தந்திரம் மிகுந்த பலனளித்தது, எத்தனை திடீர்க் காதலிகள் ஏற்பட்டாலும் அகஸ்டஸ், லிவியாவையே, "சுந்தர நாரி! பிரதம பியாரி" என்று கருதினான். அவளிஷ்டப் பட்டதையெல்லாம் செய்தான். லிபியாவுக்குத் திருஷ்டிபூராவும், அகஸ்டஸ் காலத்துக்குப் பிறகும், அரசு தன் வமிசத்துக்கு இருக்கும்படியான ஏற்பாட்டைச் செய்து முடிக்கவேண்டும் என்பதேயாகும். இருந்தமட்டும் அதிகாரம் செலுத்தினோம். தலையில் நரையும் முகத்தில் திரையும் உண்டானதும், வாழ்க்கையில் குறையும் புகழில் புரையும் உண்டாயின. என்செய்வது என்று ஏங்கிக் கொண்டு, அன்றொரு நாள் இருந்ததை அரசாளும் உரிமை தனக்கு இருத்தல் போய் தன் மக்களுக்கே போய்சேர வேண்டும் என்று திட்டமிட்டு வேலை செய்தாள் அந்தப் பட்டாடை அணிந்த ராசதந்திரி! அவளது இந்த ஆழ்ந்த கருத்தை அகஸ்டஸ் கண்டுகொள்ள முடியவில்லை. புறத்தைக் கண்டு பூரித்தான்; அகத்திலே இருந்த அரவம் அவனுக்குத் தெரியாது!

இந்த நோக்கத்துடன் லிவியா, முதல் புருடன் மூலமாக தனக்குதித்த டைபீரியஸ் ட்ரூசியஸ் என்ற இரு மைந்தருக்கும் விசேஷ அதிகாரத்தை வாங்கித் தந்தாள். அகஸ்டசுக்குப் பிறகு, அரசு அவ்விருவருக்கே போய்ச் சேரவேண்டும் என்பது லிவியாவின் எண்ணம். ஆனால் சிங்காசனத்தருகே வேறொருவன் இருக்கக் கண்டாள் லிவியா,

அகஸ்டஸின் மருமகன் மார்செல்ஸ் என்ற இளவரசனே, எதிர்கால அரசன் என்று எவரும் எண்ணினர். அகஸ்டஸ் தனது முதல் மனைவி மூலம் பிறந்த மகளை மார்செல்சுக்கு மணஞ்செய்து கொடுத்திருந்ததோடு, அவளிடம் அன்பும் கொண்டிருந்தான். லிவியா இதனைக் கண்டாள்! வெளிப்படையாக ஒன்றும் கூறவில்லை. மார்செல்ஸ்மீது மனத்தாங்கல் இருப்பதாகக் காட்டிக் கொள்ள வில்லை. சூது நிறைந்த அவளது உள்ளமாகிய குடத்தில், ஒரு தளும்புதலும் எழவில்லை. ஆனால் திடீரென மார்செல்ஸ் மாண்டுவிட்டான். மரணம் அவனை அணுகியதற்குக் காரணம் லிவியா என்று பிற்காலத்தில் பேசிக்கொள்ளப்பட்டது. அக்காலத்திலே ஒருசிலர் மட்டுமே சந்தேகப்பட்டனர். இதற்குள் லிவியாவின் இரு புதல்வர்களுள் டுரூசியஸ் என்பவன் இறந்துவிட்டான். மனமுடைந்த லிவியா ஒரே மகனாய் விளங்கிய டைபீரிசை எப்படியேனும் முடிசூட்டிக் காணவேண்டுமென்று துடித்தாள். ஆனால் அகஸ்டஸின் மகள் வயிற்றுப் பேரப் பிள்ளைகள் இருவர் கேயன், லூசியஸ் என்பவர்கள் இருந்தனர். டைபீரியசுக்கும் ரோம் சாம்ராஜ்ய சிங்காதனத்துக்குமிடையே இருந்த இந்த இருவரும் திடீரென இறந்துவிட்டனர்! லிவியாவின் மீது சந்தேகித்தான்; ஆனால் ஏதேனும் சொல்லத் துணியும் நாக்கு துண்டிக்கப்பட்டுவிடும்!

கடைசியாக ஒரே ஒரு வாலிபன் இருந்தான் போட்டிக்கு. அகஸ்டஸின் கடைசி பேரப்பிள்ளையான அக்ரிப்பா என்பவனாவான், அகஸ்டஸ் அக்ரிப்பாவையும் லிவியாவின் மகன் டைபீரியசையும் தத்துப் பிள்ளைகளாக்கிக் கொண்டான். இருவரும் சேர்ந்து இராச போகத்தை அநுபவிக்கட்டும் என்று எண்ணினான், லிவியாவுக்கு இதுவும் சம்மதமில்லை! எனவே தனது சாகசத்தை ஏவி, அக்ரிப்பாவை நாடு கடத்தும்படி அகஸ்டஸைத் தூண்டினாள். அகஸ்டசும் இசைந்தான்.

நரம்புகளின் முறுக்கு மங்கி, கண் பஞ்சடைந்து காலத்தின் அழைப்பு காதில் கேட்டுக்கொண்டிருந்த அந்நிய நாட்களில், அகஸ்டஸ் தனது அருமைப் பேரப்பிள்ளைகள் திடீர் திடீரென மாண்டது பற்றியும், லிவியாவின் வஞ்சனைகள் பற்றியும் எண்ணலானான். அவன் மனம் அவனைச் சுட்டது. நாடு கடத்திய அக்ரிப்பா மீது நாட்டம் சென்றது. யாருக்கும் தெரியாமல் அகஸ்டஸ் அக்ரிப்பாவை அவனிருந்த இடம் சென்று, கண்டு பேசிவிட்டுத் திரும்பினான். தனது சக்தி ஒடுங்கிப் போவதையும் லிவியா சூதான திட்டத்தால் ரோம் சாம்ராஜ்ய ஆட்சியை தனது வம்சத்துக்கு அபகரித்துக் கொள்ள இருப்பதையும் எண்ணி

ஏங்கினான். அகஸ்டஸ், அக்ரிப்பாவை இரகசியமாகச் சந்தித்த செய்தி லிவியாவின் செவிக்கு எட்டியது. பல ஆண்டுகளாகப் பாடுபட்டுப் பழமாக்கிய திட்டத்தை, இந்தப் படுகிழம் பாழாக்குவதா என்றெண்ணிப் பதைத்தாள். அகஸ்டஸ் கடைசி நேரத்தில் தனது பேரனிடம் பேரரசை ஒப்புவித்து விட்டால் தன் கதி, தன் மகனின் கதி என்னவாகும் என எண்ணி ஏங்கினாள்.

அகஸ்டஸின் ஏக்கம், லிவியாவின் ஏக்கம் இரண்டுக்கும் மருந்தென வந்தது அகஸ்டஸுக்கு மரணம்! அவன் உண்ட அத்திப்பழம் விஷங்கலந்தது! அதைத் தந்தது லிவியாவே! உயிருடனிருந்த அகஸ்டஸ் தந்த அதிகாரத்தை, அவனது பிணம் காயப்படுத்திற்று, காதலி தந்த கனியால், காவலர் பலர் அஞ்சக் கொடிகட்டி ஆண்ட அகஸ்டஸ் இறந்தான்! இருந்தபோது பெற்றதை இறந்த பின் இழக்காதிருக்க இது செய்தே தீர வேண்டி நேரிட்டது என்று லிவியா மனத்தில் கருதிக்கொண்டு மகத்தான ரோம் சாம்ராஜ்யத்தின் மணிமுடி தனது மகன் டைபீரியசுக்குக் கிடைத்தது பற்றிக் குதூகலித்தாள்! அந்த மணிமுடி தரித்து, மண்டலத்தோர் பலர் கட்டயங்கூறி நிற்க அரசாட்சிய அகஸ்டஸ் பெண் பேயால் பிணமானான்!



# ஜாலக்காரி ஜூலியா

காடு நிலமானதும், வனம் தோட்டமானதும், மேடு மாளிகையானதும், கரம்பு ஊற்றானதும், பள்ளம் பாதையானதும் பாட்டாளியின் உழைப்பினால், ஆனால் அவன் அந்த உழைப்பிற்குப் பிறகு அதனாலான உல்லாசங்களை அநுபவிக்கிறானா? இல்லை! தோட்டத் தொழிலாளியின் வியர்வை வாடை அவனது வாழ்க்கையோ கசப்பு! அவன் பயிரிட்டுப் பிறருக்குத் தரும் கனியோ சுவையுள்ளது. பூமிக்கு அடியிலிருந்து அவன் செல்வத்தைச் செதுக்கி எடுத்துத் தருகிறான்; ஆனால் அவன் செல்வனாவதில்லை! குளித்தும் குப்புறப்படுத்தும், எரியும் வெய்யிலில் உழைத்தும் அவன் அண்டத்தை முட்டும் மாளிகை அமைத்துத் தருகின்றான். பிறகோ அவன்மீது பணம் படைத்த பிரதாபன் உலாவுவதை காண, அண்ணாந்து பார்த்துவிட்டு, தனது குடிசையில் கூரையின் ஒழுகலைக் கண்டு மனங்கசிகிறான். கடலில் குளித்து சுறாவுக்கும் பிறவுக்கும் இரையாகாது தப்பி முத்து எடுக்கிறான். பின்னர் அது யாருடைய கழுத்திலோ மாலையாகின்றது. கைவளை யாகிறது. காதுகளில் நடனமாடுகிறது. அந்த முத்து எடுத்த தொழிலாளி வறுமைக் கடலில் நீந்தி நீந்திக் கரைகாணாது கலங்குகிறான். உழைப்பினால் உறுபயனை அனுபவிக்க முடியாது அல்லற்படுகிறான்.

ரோம் சாம்ராஜ்யத்தை அமைத்த பேரரசன் அகஸ்டஸ் இது போன்ற நிலையையே அடைந்தான்! அவனது உழைப்பு உன்னதமான ஓர் அரசை உண்டாக்குவித்தது. அதன் பயனாக ஊராரிற் பலர் உல்லாசவாசிகளாயினர். அந்த சாம்ராஜ்யச் சிறப்பைக் கண்டு களித்தனர் அனுபவித்து அகமகிழ்ந்தனர். ஆனால், சாம்ராஜ்யத்தை உண்டாக்கிய அகஸ்டஸுக்கு, மன நிம்மதி ஏற்படவில்லை. புகழ், செல்வம், செல்வாக்கு, தர்பார் இருந்தன. மனதில் மட்டும் ஆனந்தம் குடிகொள்ள மார்க்கமின்றிப் போய்விட்டது. உலகினர் பலரும் கண்டு பொறாமைப்பட்டனர்; அகஸ்டஸின் மனம் புழுங்கியதை யார் அறிவார்கள்! தனது மகள் ரோம் சாம்ராஜ்யாதி பதியின் குமாரி கேவலம் ஒரு விபச்சாரிபோல் வாழ்ந்து வந்தாள். கண்டவனிடம் காமக் கருவியானாள் என்ற விஷயத்தைக் கேட்க நேரிட்டது அகஸ்டஸுக்கு! இவனுக்குப் பிறகு மனத்தில் நிம்மதி ஏது? எரிமலைபோல் மனமாகி விட்டது. திடீர் திடீரென எரிமலை கனலைக் கக்குவதுபோல் கோபமும் சோகமும் அகஸ்டஸின் மனதில் கிளம்பின! அத்தகைய மனவாட்டத்தை, அவமானத்தைத் தந்த அடங்காப் பிடாரி ஜூலியா என்னும் அவனது குமாரி. கேளிர் அவளது காமச் சேட்டைகளை!!

அகஸ்டஸுக்கும் அவனது மனைவி ஸ்கிரீபோனியாவுக்கும் தோன்றியவள் ஜூலியா, அகஸ்டஸ் லிவியாவைக் கல்யாணம் செய்து கொள்ளுமுன்னம் ஸ்கிரீபோனியாவையே மாலையிட்டான். ஜூலியா பிறந்தாள். சோகவல்லி ஸ்கிரீபோனியாவின் வயிற்றிலுதித்த இந்த வனிதை குதூகலக் குமரியானாள்! ஜூலியா, பெரிய ஜாலக்காரி! சிங்காரி! சிரித்துச் சித்திரவதை செய்யும் கொகுசுக்காரி! வெறும் அலங்காரிமட்டுமல்ல, பலே கைகாரி! சாதுர்யமான பேச்சுக்காரி! சரசத்திற்கு அதிகாரி! ஆடவர் கூட்டத்திற்கு அவள் ஓர் சிங்காரி! அகஸ்டஸின் மானத்தைக் கெடுத்த அபசாரி!

ஜூலியாவின் அழகு ஒளியிட்டு வீசத் தொடங்கியது. அகஸ்டஸ் அவளைக் கட்டுதிட்டமெனும் திரையிட்டு மூடிவைத்தான். அவளைக் காப்பதே தன் கடனெனக் கொண்டு விசேஷமான ஏற்பாடுகள் செய்தான். மங்கைப் பருவத்திலேயே இந்த மரகதவல்லியின் மனம் மரக்கிளைகளிற் தாவும் மந்திபோல் அங்குமிங்கும் தாவலாயிற்று. கண்களோ; பாய்ந்தவிடமெங்கும் வெற்றி பெற்றன! புன்சிரிப்போ வீராதி வீரர்களையும் விநாடியில் வீழ்த்திற்று, அறிவும் குறும்புத் தனமும் கலந்த அவளது பேச்சோ கவிகளின் கற்பனைச் சுவையையும், கானத்தையும் தோற்கடித்து அகஸ்டஸின் வீரம் போலவே, அவனது மகள் ஜூலியாவின் சோபிதம் ரோம் சாம்ராஜ்ய மெங்கும் வீசலாயிற்று. அகஸ்டஸ் எங்ஙனம் தனது பரந்த சாம்ராஜ்யத்தைப் பிறர் சிதைக்கவொட்டாதபடி, பட்டாளங்களை அமைத்துப் பாதுகாத்து வந்தானோ அதுபோல, ஜூலியாவின் அழகைக் கண்டு சொக்கும் ஆடவர் கூட்டத்தால், அவளுக்கு இடையூறும் இழுக்கும் ஏற்படா திருக்கவேண்டும் என்பதற்காக, அதிகாரத்தைக் கொண்டு அவளைச் சுற்றி அரண்கள் எழுப்பினான்! அவள் வாலிபர்களுடன் பேசக் கூடாது; ராஜ்ய சபையிலன்றி தனியே அவர்களிடம் பழகக்கூடாது; படிப்பு, பாட்டு, பரிபாலன விஷயம் ஆகியவைகளிலேயே அவள் தனது மனதைச் செலுத்த வேண்டும் என்று பலவிதத் திட்டங்கள் செய்து வைத்தான்! அலைகளையும் எண்ணத்தையும் அடக்க அகஸ்டஸுக்கோ, வேறு யாருக்காகிலுமோ அதிகாரம் ஏது! மேகங்கள் சூழ்ந்திருப்பினும் நிலவு அவைகளைச் சிதறடித்துவிட்டுத் தனது ஒளியை பரப்பும் வகைபோல், அகஸ்டஸின் அதிகார அரண்களைத் தூளாக்கிவிட்டு, ஜூலியா சுயரூபம் எடுக்க அதிக காலம் பிடிக்கவில்லை.

அகஸ்டஸின் கொலு மண்டபமோ சொல்லொணாக் காட்சி! நீலவானத்தில் நட்சத்திரங்கள் ஜொலிப்பதுபோல் அகஸ்டஸின்

தர்பாரில் வெற்றி வீரர்கள் வேல்விழி மாதரையும் விற்பன்னர்கள் வனிதையரையும், ராஜதந்திரிகள் ரமணிகளையும், கவிவாணர்கள் கட்டழகிகளையும் கண்டும், விருந்துண்டும், களித்தும், கானங்கேட்டும், நடமாடியும், நர்த்தனமாடியும், பேசியும், சுகந்தம் பூசியும், ஆடியும், ஆனந்தத்தைத் தேடியும் அகமகிழ்ந்து வாழ்ந்தனர். இத்தகைய இடத்தில்,

"பெண்ணோடு ஆணே பேசிடில் தனியே
பேத புத்தி யாகுமே !"

என்ற பாடல் மிகப் பொருத்தமல்லவா! அதற்காகத்தான் அகஸ்டஸ் ஜூலியாவைத் தனியே பேசும் சந்தர்ப்பம் எழாதபடி பாதுகாத்து வந்தான். ஆனால் அத்தகைய பாதுகாப்பு எத்தனை நாளைக்கு முடியும்! அதுவும் ஜூலியாவோ இன்ப வாழ்வுக்காக எதையும் விட்டுக் கொடுக்கத் துணிந்தவள், போக போக்கியங்களில் புரள்வதில் அலுக்காத அணங்கு. "தந்தை வாள் வீச்சினால் தரணி பல வென்றார்; நாம் நமது கடைக்கண் வீச்சினால் ஆடவர் பலரை அடிமை கொள்வோம்" என்று துணிந்து நடந்தவள்! அகஸ்டஸின் தர்பாரிலே, மண்டலாதிபதிகள் கப்பங்கட்டி கட்டியங்கூறி நிற்பர் அகஸ்டஸுக்கு! ஆனால் இவர்கள் யாவரும் ஜூலியாவிடம் தமது மனத்தைக் காணிக்கையாகக் கொடுத்துவிடுவர். ஜூலியாவோ யாருக்கும் கடாட்சிக்கும் இயல்பினள்! விபசார வள்ளல்!!

சிறு வயதிலேயே சீமானொருவனை அவள் மணம்செய்து கொள்ளும்படி அகஸ்டஸ் ஏற்பாடு செய்தான். நற்குணவான் ஒருவனை மணந்துகொண்டு அவளோர் மங்கையர்க்கரசியானாளா? இல்லை! தனது கணவன் மார்செல்ஸிடம் அவள் தனது மனத்தை ஒப்படைக்கவில்லை! உடலைப் பற்றியோ அவள் பொருட்படுத்தும் வழக்கமில்லை!!

ரோம் நகரெங்கும் திருவிழா! வாணவேடிக்கை! பந்தயங்கள்! பரிவார ஆரவாரம்! பாடல்! ஆடல்! விருந்து! கேளிக்கை! எல்லாம் ஜூலியாவின் திருமண வைபவத்துக்காகவே, இவைகள் ஜூலியாவுக்குத் தித்திக்கவில்லை. கரும்பு தோட்டத்திலே கரி புகுவதுபோல் ஆடவர் கூட்டத்திலே ஜூலியா புகுந்து அழிக்கத் தலைப்பட்டாள்! மார்செல்ஸ் குரூபியல்ல; கோணல் நடத்தைக் காரனுமல்ல; பெருங்குடி பிறந்தோன்; பெருமை பெற்றோன்; அகஸ்டஸின் அபிமானத்தை அதிகமாகப் பெற்றவன். எதிர்காலத்தில் ஏந்தலாகவரும் பாக்கியசாலி என்று எவரும் புகழ்ந்தனர். இவையேனும் ஜூலியாவின் மனத்தைத் திருப்தி

செய்யவில்லை. அவள் தனது இயல்பை மாற்றிக்கொள்ளவில்லை. அது அவளது அழகும் வயது வளர வளர கொழுந்துவிட்டு எரியலாயிற்று.

இதற்குள் அகஸ்டஸை கல்யாணம் செய்து கொண்ட லிவியா, மார்செல்ஸ் இருக்கும்போது தன்மகனுக்குப் பட்டம் கிட்டாதென்று கருதினாள்; மார்செல்ஸ் மாண்டான்! கொல்லப் பட்டான்! ஆனால் ருஜு ஏதும்கிடையாது. வெளியே பேசவும் முடியாது; லிவியாவின் செல்வாக்கு உச்ச நிலையில் இருந்த நேரம் அது. மார்செல்ஸ் 24 வயது வீரன். அவன் இறந்ததைக் கண்ட ஜூலியா, கணவன் என்ற விலங்கு கத்தரிக்கப்பட்டு விட்டது என்று களித்தாள் "கூப்பிடு தோழர்களை" என்றாள். சேடியர் ஓடிச்சென்று சிங்கார புருடர்களை மந்தை மந்தையாக ஓட்டி வந்தனர். யார் மனதும் நோகாவண்ணம் வேண்டினோர்க்கெல்லாம் வரந்தந்தாள். ஜூலியா இரவுகளில் ரோம் நகரவீதிகளில், காதலர்களுடன், விளையாடிக் கொண்டும், சிரித்துக் குலுக்கி நடந்துகொண்டும் பொழுது போக்குவாள்! கூச்சம் மறைப்பு, திரையிடுதல் முதலியன ஜூலியாவுக்கு கிடையாது. கேலி செய்வரே, தண்டிப்பரே என்ற கவலை கிடையாது. அகஸ்டஸின் கோபத்தைப் பெறுவோமே என்றும் அவள் அஞ்சவில்லை! அவ்வளவு காமச் சேட்டைக்காரியானாள். ரோம் நகரமெங்கும் அவளைப் பற்றிய கேலிதான்; அவள் காதில்படும்படியும் பேசுவர். அவளோ கண் சிமிட்டி கைகொடுத்து "சபாஷ்" என்பாள். அகஸ்டஸின் வீரம், லிவியாவின் சாகசம், ஜூலியாவின் காமாந்தகாரம் இம் மூன்றும் ரோம் நகரப் பாடலுக்கு பல்லவி, அநுபல்லவி, சரணம்.

மீண்டும் ஜூலியாவுக்கு திருமணம் நடந்தது. இம்முறை அக்ரிப்பா என்பவன் மாலையிட்டான். அந்த மாலை கழுத்திலிருக்கையிலேயே ஜூலியாவின் கண்ணும் கருத்தும் வழக்கமான இடங்களில் உலவின. சிலகாலம் சென்றபின் ஜூலியாவை மணம்செய்து கொண்ட அக்ரிப்பா இறந்தான். துக்கம் காக்கும் சடங்கு சிலதினம்! பிறகு பழையபடி பாட்டுச் சுவை மொழியாள் பஞ்சணைப் போருக்கு ஆயத்தமானாள். ஊரார் கேலி செய்தனர்! உரக்கச் சிரித்து, "உல்லாசத்தைத் தடுக்க இவர்கள் யார்?" என்று கூறிவிட்டு வாடிக்கைகாரரை மகிழ்வித்து வந்தாள், வல்லரசர் பலரை வணங்க வைத்த அகஸ்டஸின் மகள்!

சிலகாலம் சென்றதும், லிவியாவின் முதல் புருடனுக்குப் பிறந்த டைபீரியஸ், ஜூலியாவைக் கல்யாணம் செய்துகொண்டான். இது வெறும் அரசியலுக்காக நடந்த சம்பந்தமேயொழிய, அணுவளவு அன்பேனும் இருவருக்குமிடையே இருந்து சம்பந்தத்தை ஏற்படுத்தவில்லை. டைபீரியசை ஜூலியா கேவலமாக மதித்தாள்.

ஜூலியாவையும் பற்றித் துளியும் கவலைகொள்ள மறுத்தான் டைபீரியஸ், ஜூலியாவின் நண்பர்கள் இந்த சம்பந்தத்தைப்பற்றி சஞ்சலப் படவில்லை! செனட்மெம்பர்கள், தளபதிகள், புலவர்கள், சீமான்கள், நடிகர், பாடகர், நாவலர் முதலிய பலப்பலரகங்கள் ஜூலிெவின் ஆசை நாயகர்கள்! கண்டவுடன் கனியும் முகத்தினள்; தொட்டவுடன் துவளும் மனத்தினள். துதித்ததும் அருளும் இயல்பினள் ஜூலியா! எனவே அவளது அன்புக்குப் பாத்திரமானவர்கள் அநேகர்!

டைபீரியஸ் இந்தக் கண்றாவியைக் காணச் சகியாமல் ரோம் நகரைவிட்டு ரோட்ஸ் என்ற பிரதேசத்தில் தங்கி வந்தான்.

மகளின் மந்தகாசத்தால், மருகர் கூட்டமெனும் மந்தை ரோமில் பெருகும் செய்திகேட்ட அகஸ்டஸ் சினந்தான். கண்ணீர் சிந்தினான்; கைகளைப் பிசைந்து கொண்டான்; தலையில் அடித்துக்கொண்டான். என் செய்வது! ஜூலியாவை கொன்று போட நினைத்தான்! அவளால் தனக்கு ஏற்பட்ட அவமானம், அவனை வயோதிகத்தை அதிகமாக வாட்டத் தொடங்கிற்று, "விபச்சாரி, அவளை இனி தொலைத்தே தீருவேன்" என்று அகஸ்டஸ் கடுங்கோபத்துடன் கூறி ஜூலியாவை பாண்டர்டோரியா என்ற தீவுக்கு அனுப்பி, அங்கேயே காவலில் வைத்துவிட்டான். அவளது காதலுக்காக வேட்டையாடிய பேர்வழிகளைப் பிடித்திழுத்துத் தண்டித்தான். டைபீரியஸ் ஜூலியாவை இங்ஙனம் செய்தது முறையல்ல என்று அகஸ்டசுக்குக் கடிதம் எழுதினான்! அது வெறும் பாசாங்கு! துஷ்டை தொலைந்தால் போதுமென்பதுதான் அவன் எண்ணம், இதற்கிடையே, ஜூலியாவின் அபிமானிகள் அவளைச் சிறை மீட்கக் கருதினர். அகஸ்டஸை வேண்டினர், அகஸ்டஸ் அசையவில்லை. ஜூலியாவை ரெஜியம் என்ற வேறோர் இடத்திற்கு அனுப்பி வைத்துவிட்டான். டைபீரியசுக்கும் ஜூலியாவுக்கும் நடந்த திருமணத்தை ரத்து செய்துவிட்டான். ஜூலியா தகப்பனின் கோபத்தால் தாக்கப்பட்டு துவண்டு போனாள். அகஸ்டஸ் இறந்த பிறகு, டைபீரியஸ் அதிகாரத்திற்கு தான் வந்ததும் ஜூலியாவை அவள் வீட்டிலேயே சிறையிட்டான், பஞ்சையாய், பராரியாய், பழிப்புக்கும், இகழ்ச்சிக்கும் இலக்காகி உண்ண உணவின்றி, ஊராண்டவனின் குமாரி மடிந்தாள். உலகம் போற்றும் உயர்தர வீரன் அகஸ்டஸின் குடும்பப் புகழின் கறை, மறைந்தது பற்றி மனவருத்தப்பட்டவர் எவருமில்லை! தொலைந்தாள் ஜூலியா என்றே பலரும் களித்தனர்.



# காமவெறியன் காலிகூலா

அ ரண்மனையிலே அரசன் கொல்லப்பட்டுக் கிடந்தான்! நகரமெங்கும் குதூகலமும் கொண்டாட்டமுமாக இருந்தது! "பேரரசை கொண்டவரே, பிரியபதி! உம்மைவிட்டு நான் எங்ஙனம் வாழ்வேன்?" என்று அரசி அழுது புரண்டாள். "அப்பா, அப்பா!" என்று அலறினாள் பெண்.

லூபஸ் என்ற சதிகாரன் சிரித்த முகத்தோடு காட்சியைக் கண்டான். உருவிய உடைவாளோடு நின்றான்.

"உயிருக்குயிரான அவர் போய் நானிருக்க வேண்டுமா? உன்னை வேண்டுகிறேன். என்னைக் கொன்றுவிடு" அரசி கெஞ்சினாள்.

"அதுவே முறை" என்றான் அவன். கூறிய வாள் அவளது இருதயத்தைத் துளைத்தது. கூந்தல் இரத்தத்தில் தோய்ந்தது. சாய்ந்தாள் அரசி.

அரசிளங்குமரியை, லூபஸ் பிடித்திழுத்துச் சுவற்றில் வீசினான். தலை சுக்கு நூறாயிற்று, சுடலைவாசியானால் அவளும். அரச குடும்பத்தில் இந்த முடிவு கேட்டு மக்கள் மகிழ்ந்து, "தொலைந்தது பீடை" என்று கூறினர்.

சுட்டுக்கதையல்ல! ரோம் சாம்ராஜ்ய சரிதம்!

காலிகூலா என்ற அரசனும், அவனது மனைவி சீசோனியாவும் மகளும் கொல்லப்பட்ட சம்பவமே மேலே தீட்டப்பட்டிருப்பது, மன்னன் மாண்டது கேட்டு மக்கள் மகிழ்ந்ததன் காரணம், மன்னன் உயிருடன் இருந்தபோது செய்த கொடுமையேயாகும், அத்தகைய காலிகூலா எனும் ரோம் சாம்ராஜ்யச் சக்கரவர்த்தியின் காமவெறியைக் கூறுவோம் இனி.

காலிகூலா, டைபீரியஸ் எனும் பேரரசனின் பேரன்! டைபீரியஸ் அக்கிரமமாக ஆட்சி செலுத்தி மாண்ட பிறகு காலிகூலாவுக்குக் கிரீடம் கிடைத்தது. பட்டத்துக்கு வந்ததும், அடக்கமும் அன்பும் புத்தியும் கொண்டவன்போல் காலிகூலா நடந்து கொண்டான். மக்கள் டைபீரியஸ் காலத்திலேயே பட்ட கஷ்டத்தைக்கூட மறந்து, இனியேனும் நிம்மதி ஏற்படுமென்றெண்ணினார். ஆனால் முகமூடி கீழே விழுந்துவிட்டது. கபடத்தைக் கலைத்துவிட்டு காலிகூலா தனது காட்டுமிராண்டித்தனமான காரியத்தை நடத்தலானான். கொடுங்கோலாட்சியின் விளைவாக மக்கள் கண்ணீரும் கம்பலையுமாக இருந்தனர். காலிகூலாவின் காமவெறியாட்டங்களோ கேட்கவும் கர்ண

கடூரமானவை. பெருங்குடி, அந்தஸ்து, உறவு முதலிய எத்தகைய வெளியிடப்பட்டிருப்பினும் அழித்துவிட்டுப் பெண்களைச் சூறையாடுவதிலே பெருமை பாராட்டிக்கொண்டவன் காலிகூலா! அவனது காமச் சேட்டைக்குப் பலியாகாத பிரபல குடும்பங்கள் மிகச் சிலவேயாகும். மனிதத் தன்மையையும் மறந்து மாதரிடம் மதிமயங்கிக் கிடந்தான். கேட்பவர் மனத்தைத் துடிக்கச் செய்யும் கேடுகள் செய்தவன் இம்மன்னன். தனது சகோதரியையே கணவனை விட்டுப் பிரித்து, பெண்டாளத் துணிந்த பேயன்! இதனை மறைக்காது, பலரறியப் பேசியவன்!

அத்தகைய காலிகூலாவின் மரணத்தைக் கேட்ட மக்கள் மகிழ்ச்சியடைந்ததிலே ஆச்சரியமேது!

காலிகூலா மூன்று மங்கையரை மணம் செய்து கொண்டான். முதலிருவரைச் சின்னாட்கள் சீமாட்டியாக வைத்திருந்துவிட்டுத் துரத்தி விட்டான். கடைசி மனைவியிடமே கட்டுண்டு கிடந்தான்.

முதல் திருமணம் மிக விசித்திரம்; விபரீதம்!

மேளங்கள் முழங்கின! சீமான்களும் சீமாட்டிகளும் ஆடை அணிந்து சிரித்துக்கொண்டு மணவினைக் காணச் சென்றனர். ஆடல் ஒருபுறம்! பாடல் மற்றோர் புறம்! கேளிக்கையும் களியாட்டமும் வேறோர்புறம், மகர தோரணங்கள், வரவேற்பு வளைவுகள், வாணவேடிக்கைகள், வரிசைகள் முதலிய வசீகரக் காட்சிகளுடன் திருமணம் தொடங்கிற்று.

காலிகூலாவுக்கல்ல! கால்புர்னியஸ் பிசோ என்ற சீமானுக்கும், ஒரேஸ்டில்லா என்ற சிங்காரிக்கும். அந்த பிரபல திருமணத்தைக் காண ரோம் சாம்ராஜ்ய ரத கஜ துரக பதாதிகளின் காவலர்களும், பிரதானியரும் வந்தனர். மாப்பிள்ளை மன்னனை வேண்டி, தனது மணவினைக்கு வந்து, தன்னைக் கௌரவிக்கும்படி கேட்டுக் கொண்டான், மன்னனும் இசைந்தான்; மணம் நடக்கும் மாளிகை புகுந்தான். மணப்பெண் அணிபூண்டு, பட்டுடை உடுத்தி, பரிமளம் பூசி, கண்களைப் பறிக்கும் வனப்புடன் இருப்பதைக் கண்டான். அவள் மீது காமுற்றான்; அவ்வளவுதான். மணக்கோல மாது மன்னனின் கட்டளைப்படி அரண்மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டாள். மாப்பிள்ளைக் கோலத்தில் இருந்த பிசோ எனும் சீமான் மலரை மந்தியிடம் சிக்க வைத்தோமே என்று சிந்தைக் குழம்பிக் கிடந்தான். விருந்துண்ண வந்தவர்கள், நோயுற்ற உள்ளத்தினராயினர்! வாத்தியங்கள் ஒலித்தன! மணம் நடக்கவில்லை!! அரண்மனையிலே, அரசன் ஒரேஸ்டில்லாவை கட்டிலறைக்கு நுழைய கட்டளையிட்டான்.

அவன் அதனை மறுக்கவில்லை. "அவளை நான் மணம் செய்து கொண்டேன்" என்று பிறகு மன்னன் அறிவித்தான். மக்கள் கோல் கொண்டவனிடம் குரங்கென இருந்தனர். எனவே "சரி" என்றுரைத்தனர். காலிகூலாவின் குணாதிசயத்தைக் கண்டிக்கப் பயந்தனர். பழிக்கஞ்சாப் பாதகனாகிய காலிகூலாவின் கோபத்திற்காளானால், சித்திரவதை நடக்குமென்பது மக்களுக்குத் தெரியும் கல்யாணப் பந்தலில் நுழைந்தவளைக் கைப்பிடித்திழுத்து வந்து காதலியாக்கிக் கொண்ட காதகன் கடைசிவரை அவளைக் காப்பாற்றவுமில்லை, "ஆசை அறுபது நாள்" என்பார்களே அதுபோல காமவெறி அடங்கச் சிறிது காலம் பிடித்தது. பிறகோ, கன்னி கசப்பானாள்! விவாகத்தை ரத்து செய்துவிட்டான், ஒரேஸ்டில்லாவை விலக்கிவிட்டான். அக்ரமம் அத்துடன் முடிந்ததா? இல்லை அவள் மீண்டும் பிசோ சீமானைக் கல்யாணம் செய்து கொள்ளக்கூடாதெனக் கருதி, அவளையும் பிசோவையும் நாடு கடத்தி இருவரையும் வெவ்வேறு சிறையிலிட்டு வாட்டினான்.

முதல் கல்யாணத்தின் அழகு இது. பிறகு பேயாட்டமாடிக் கொண்டிருக்கையில் ஓர் நாள் பிரதானியர் காலிகூலாவிடம், முன்னர் ரோம் சாம்ராஜ்ய சல்லாபிகளின் ஜொலிப்பு பற்றிக் கூறிக்கொண்டிருக்கையில், "லோவியா என்றோர் சீமாட்டி இருந்தாள். அவள் அழகை என்னென்று வர்ணிப்பது! வான்மதியே வனிதையாக வந்ததோ என்று கூறும் வகையான வனப்புள்ளவள்" என்றனர்.

"அவள் எங்கே இப்போது?" என்று பரிவுடன் கேட்டான் பாதகன்.

"கண் பஞ்சடைந்து நரை மூதாட்டியாக இருக்கிறாள்" என்றனர் பிரதானியர். மன்னன் சித்தம் சோர்ந்தான். பிறகு கேட்டான், "அவளுக்குச் சந்ததிகள் உண்டோ?" என்று, "ஒரு பேத்தி உண்டு!" என்றனர் பிரதானிகள். "மிகச் சந்தோசம். அவள் பேரழகியாகவே இருக்கவேண்டும். பிடித்திழுத்து வா அவளை" என்று மன்னன் உத்தரவிட்டான். பாட்டியின் பிரதாபத்தைக் கேட்டுப் பேத்திக்கு தூதனுப்பிய மன்னனின் மமதையை என்னென்பது!

இங்ஙனம் மன்னனின் கவனத்திற்காளான குமரியின் பெயர் லோலியர்பாலினோ என்பதாகும். மாசிடோனியா மண்டல கவர்னரை மணம் செய்து கொண்டு, மிகச் சுந்தராங்கியாகிய பாலினோ குறைவற்ற மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தாள்.

"உடனே ரோம் நகர் வந்துசேர்! வரும்போது உனது மனைவி பாலினாவையும் அழைத்து வா" என்று ஓலை வந்தது அரசனிடமிருந்து.

மெம்மியஸ்ரீ குல்ஸ் என்ற அந்த கவர்னர் கட்டளைப்படி நடந்தான். தன் மனைவியை மன்னன் மணம் செய்துகொள்ளச் சம்மதித்தான்.

சம்மதிக்கவில்லையேல், அவன் தலை தரையில் உருளும். விதவையின் தலை மன்னன் மடியில் சாயும்! இதைவிட, சம்மதிப்பதே சரி என்று துணிந்தான் சொரணையற்ற அந்தச் சீமான். பாலினாவுக்கும் இந்த சம்பவம் பழம்நழுவிப் பாலில் விழுந்ததுபோல் இருந்தது. படையாள்வோனின் மனைவியாக இருப்பதைவிடப் பாராள்வோனின் பட்டமகிஷியாவது சந்தோஷிக்கத்தக்கது என்று அவள் கருதினாள். அரசனின் மனைவியானாள்! அரசியாகவில்லை!! ஏனெனில், வெகு விரைவில் அவள்மீது வெறுப்பு கொண்டு, மன்னன் விலக்கி விட்டான். விசாரவதியாகி, சிலகாலம் பாலினா வாழ்ந்தாள் பிறகு அவளும் கொடுமையான கதியே பெற்றாள்.

மூன்றாவதாக, முடிதரித்த முரடன் சீசோனியா என்பவளை மணம் செய்து கொண்டான் அவள் அழகற்றவள்! ஆணவக்காரி! ஆனால் அவளிடந்தான் அரசனுக்கு அமோகமான ஆசை! அவளிஷ்டத்தின்படி நடக்கலானான்! விதவிதமாக ஆடை அணியச் செய்து அவளை வெளியே அழைத்துச் செல்வான். போர் வீரன் உடை அணியச்செய்து குதிரைமீது ஏறித் தன்கூட வரச்செய்வான். ராஜாங்க உபசாரம், விருந்துகள் முதலியவற்றை அவளுக்கு வழங்கினான். தன் ஆணைக்கு மக்கள் அடங்குவது போலவே, சீசோனியாவின் ஆணைக்கு அடங்கவேண்டும் என்று ஏற்பாடு செய்தான். அழகற்ற இந்த அகந்தைக்காரிக்கு அரசன் இவ்வளவு கட்டுப்பட்டுவிட்டது ஆச்சரியத்தையே தந்தது.

காலிகூலாவின் ஆட்சியினால் விளைந்த கொடுமையைச் சகிக்க மாட்டாதவர்கள் அவனைக் கொலை செய்யச் சதிசெய்தனர். அத்தகைய சதிகாரரில், சாபினஸ் என்பானே வெற்றி பெற்றான். காலிகூலாவைக் கொலை செய்துவிட்டனர்! ரோம் நகரத்திலிருந்த குடும்பங்கள் அன்று அடைந்த ஆறுதலுக்கு அளவில்லை. அரசனின் மரணத்தைக் கண்டு சீசோனியாவும் அவள் மகளும் அழுதுகொண்டிருக்கும்போது லூபாஸ் என்பவன் சீசோனியாவைக் கொன்று போடும் எண்ணத்துடன் வந்தான். தனக்கு வர இருக்கும் தடுக்கமுடியாத ஆபத்தைக் கண்ட சீசோனியா தானே வேண்டிக் கொள்வதுபோல் லூபாஸை நோக்கி, தன்னைக் கொன்றுவிடும்படிக் கேட்டுக்கொண்டாள். அதற்காகவே அங்கு வந்தவன், தங்கு தடையின்றி அந்த தர்ம கைங்கரியத்தைச் செய்து முடித்தான்.

# ஒய்யாரியின் ஓயாமடம்

அழகான உருவம்! ஆஜானுபாகு! தேஜசான முகம்! தேன்மொழியோன்! கண்கள் கனிரசக் கலசங்கள்! உனது அழகு கண்டு நான் மெச்சுகிறேன்.

"சக்கரவர்த்தினீ! தங்களின் கடாட்சத்தைப் பெற்ற நான் பாக்கியசாலிதான்." உன் அழகுக்கேற்ற பரிசு தரத்தான் உத்தேசம். ஏன் கூச்சப்படுகிறாய்? உட்காரு இப்படி! அரசியின் அந்தப்புரத்திலே உனக்கேன் அச்சம்? கதவு சாத்தப்பட்டிருக்கிறது! தோழியர் பஞ்சணைமீது மலர் தூவிவிட்டு வெளியே சென்றுவிட்டனர். விருந்துண்ட அலுப்பால் மன்னர் குறட்டைவிடுகிறார். அது உன் செவிக்கு ஆகாதென்றுதான் சங்கீத பளிங்கு மண்டபத்திலே ஏற்பாடு செய்திருக்கிறேன். வசீகரமிக்க வாலிபனே! வா இப்படி!"

"என்னை ஒரு பொருட்டாக மதித்து இங்ஙனம் உபசாரம் செய்வது கண்டு நான் ஆச்சரியமடைகிறேன்."

"இருக்கும், இளைஞா! உன் அழகைக்கண்டு நான் ஆச்சரியப் படுவதைப்போல!"

"தங்கள் கட்டளையே எனக்கு வேதம்."

"கட்டிலறையிலே கட்டளை ஏது கண்ணாளா!"

"அரசியாரே! நான் கேட்கும் சொற்கள் உண்மையா இது என்ன விபரீதம்!"

"விபரீதமொன்றுமில்லை! வீண் காலம் போக்காதே நண்பா! வீணையிலிருந்து நாதம் பிறக்கும். மலரிலிருந்து மணம் தோன்றும்; காதலிலிருந்தோ எல்லாம் தோன்றுமல்லவா! கவி, சித்திரம், ஓவியம் முதலிய பலவும் காதலினின்றும் தோன்றியவை என்பது உனக்குத் தெரியாதா. வெகு விரைவிலே, அவைகளை நீ தெரிந்து கொள்வாய்! நான் உனக்கு அரசி மட்டுமல்ல, ஆசிரியை; ஆமாம் உனது ஆசை நாயகி!"

"ஆ! என்ன வார்த்தை சொல்லத் துணிந்தீர்கள்! என் தலை சுழல்கிறதே! இதென்ன அநியாயம்...?"

ஒரு சிரிப்பு, ஓர் அணைப்பு, ஒரு முத்தம், மௌனம், புன்னகை, புது உலகம் பிறக்கிறது!

"அழகான ஆடவன் என் ஆசை நாயகனாக வேண்டும்.

இல்லையேல், அவன் இறந்துபோகவேண்டும்," இது மேலே தீட்டிய பஞ்சணைப் பேச்சுக்குச் சொந்தகாரியான பட்டத்தரசியின் திட்டம். கடைசிவரை அதை அவள் நிறைவேற்றியே வந்தாள். வசீகரமான வாலிபரை வரவழைப்பது, விருந்துண்ணச் செய்வது; இது அவள் வாடிக்கை விருந்து. அறுசுவை உண்டியல்ல, கனிரசமல்ல. அவள் தன்னையே விருந்தாக அளிப்பாள்! அந்த விருந்தை ஏற்றுக்கொள்ள மறுப்போருக்கோ, மரணம் நிச்சயம்! மந்திரத்தாலல்ல, மாயா ஜாலத்தாலல்ல, அதிகாரத்தால் மடத்தனத்தை அணியெனக் கொண்டிருந்தவனுக்குப் பெண்டாகி அவனைத் தனது கைப் பாவையாக்கி வைத்துக் கொண்டிருந்ததால் இவ்வளவும் செய்ய முடிந்தது. அத்தகைய கொடியவளின் பெயர் மெசாலினா.

காமச் சேட்டையில், விபசாரத்தில் உலகில் ஈடு இணையற்றவள் என்று யாரேனும் குறிப்பிட வேண்டுமானால், மெசாலினாவைத்தான் கூறவேண்டும். கோல்கொண்டவனின் மனைவியான மெசாலினா, ரோம் சாம்ராஜ்ய குச்சுக்காரியாக வாழ்ந்தாள்! அந்தப்புரத்தில் ஆபாச சரசங்களை ஆறெனப் பெருக்கிவிட்டாள்! ஆடவர் கூட்டத்தை வேட்டையாடினாள். அவளது கண் எங்கே தம்மீது பாய்ந்துவிடுகிறதோ என்று ஆடவர் அஞ்ச வேண்டியும் நேரிட்டது. அவ்வளவு பசி அவளுக்கு! காமருசியில் அவ்வளவு பிரேமை!

இரத்த வாடை கண்ட புலி பாய்வதுபோல், அழகிய ஆணின் வாடை அடித்தால் போதும், அரசி மெசாலினா அங்கு படையெடுத்து விடுவாள். பேச்சினால் சிலரை சிறை பிடிப்பாள்! சிரிப்பு சிலரை சொக்கவைக்கும் சாகசத்தால் சிலரை சாய்ப்பாள்! சரசத்தால் சிலரைச் சிதைப்பாள்! இவைகள் பயன் தராவிட்டால், கிட்டாதாயின் வெட்டன மறவென்று கிழப்பேச்சு பேசமாட்டாள்! பலவந்தப் படுத்துவாள்! "பஞ்சணைக்கு வருகிறாயா! படுகளம் போகிறாயா?" என்று கேள்வி பிறக்கும். பஞ்சணைக்கு வரமறுப்போர் பிறகு பாரில் வாழ முடியாது? அதுதான் அவள் சட்டம்! அத்தகைய வேட்டையாடியே அவள் தன் பசியை தீர்த்துக்கொள்ள முடிந்தது? காமத்தீ அவளது அங்கங்களில் சதாகாலமும் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்தது- அந்த பலி பீடத்திலே, தங்கள் வலிவு, வனப்பு, வாலிபம் வசீகரம் ஆகியவைகளைக் காணிக்கையாக வைத்தவர்கள் பலப்பலர்!

இவளை மணந்த மன்னனுக்கு சதாகாலமும் பசி... நாள் தவறாமல், நானூறு, அறுநூறு பேருடன் சேர்ந்து நாக்கிலே தழும்பேறும் அளவுக்கு, நானாவிதமான உணவு வகைகளைத் தின்று, பல்வேறு நாட்டுப் பானவகைகளை பருகி உருளுவது அவனது வேலை!

அரசியின் அலுவல் அந்தப்புரத்தில்; அரசனின் அலுவலிலிருந்த மண்டபத்தில், கொலுமண்டபமோ, கோணற் சேட்டைக்காரர்கள் கொள்ளைத் திட்டம் தயாரிக்கும் இடம்- இது சாம்ராஜ்ய சித்திரம் - இதற்கு அரசன் கிளாடியஸ்.

ஒரு நாள் ஓடோடிவரும் சிப்பாய்களைக் கண்டு சிந்தை கலங்கி நின்றான் கிளாடியஸ்! அது மன்னனாகா முன்னம் என்ன ஆபத்தோ, ஏதோ என்று பயப்பட்டுக் கொண்டிருந்த கிளாடியஸை அந்தச் சிப்பாய்கள் வணங்கி வாழ்த்தி, "நீரே இனி ரோம் சக்கரவர்த்தி" என்று கூறிப்பட்டம் சூட்டினர். ஆச்சரியத்தால் கிளாடியஸ் திகைத்தான்! அரியாசனத்திலமர்ந்தான். அரசபோகம் காலடியில் நிற்கக் கண்டான். புதையல் கிடைத்தவன் பூரிப்பதுபோல் பூரித்து கரும்புதின்ன கைக்கூலியா என்று கருதி, ஆடம்பரம் என்ற புரவிமீது ஏறிக் கொண்டான், வேக வேகமாகச் சென்றான், திடீரென வாழ்க்கை கிளாடியஸுக்குப் புதிதாகி விட்டது.

அவன் நாலு மனைவிகளை மணம் செய்து கொண்டவன். சிலர் இறந்தனர்; சிலர் விலக்கப்பட்டனர். ஐந்தாவதாகக் கொண்டான், இந்த அருங்குணவதி மெசாலினாவை. "நூலைப்போல சேலை. தாயைப்போல மகள்" என்பார்கள். இதுபோல் மெசாலினா தனது தாயைப் போன்றவள் கெட்ட நடத்தையில் அரசனின் மனைவியானதும், மெசாலினா தனது வேட்டையைத் துவக்கினாள். மந்திரிப் பிரதானிகள், சேனாதிபதிகள், சேவகர்கள் நடன ஆசிரியர், இசைவாணர் என யாரார் மீது மனம் செல்லுகிறதோ, அவர்கள் யாவரும் அரசியின் ஆசை நாயகர்களாயினர். வாழ்க்கையின் இலட்சியமே, வகை வகையான அநுபவங்கள் பெறுவதுதான் என்பதும், இச்சையைப் பூர்த்தி செய்துக் கொள்ளத் தணிந்த பிறகு, எது வருமோ, எது போகுமோ என்று எண்ணுவது கூடாது என்பதும் எவர் தடுத்தாலும், கண்டித்தாலும், கேலி செய்தாலும் கவலை கூடாது என்பதும், மெசாலினாவின் நீதி நெறி வாக்கியங்கள். இணங்க இறுக்கும் ஆடவரை இரக்கமற்றுக் கொல்வதில் துளியும் தயங்காதவள். மாதருக்குள்ள பண்புகளையும் மறந்துவிட்டு, மருவ வா என்று அழைத்த பிறகு; ஒருவன் மடத்தனமாக மறத்துவிட்டால் மண்ணில் அவன் வாழ்வதே ஓர் இழுக்கு என்று மெசாலினா கருதினாள். கைக்கு எட்டிய கனியைத் தின்னத் தடைப்பட்டால் "கசக்கிப் பிழிந்து குப்பையில் வீசு', என்பாள் மெசாலினா.

போக போக்கியத்தில் புரண்டு கொண்டிருந்த புல்லர்கள் நிரம்பிய ரோம் சாம்ராஜ்யத்தில், தமது அக்ரமச் செயலுக்கு அரண்மனை தடை விதிக்குமோ என்ற அச்சத்தை மட்டுமே ஓரளவுக்கு கொண்டிருந்த

ஆடவர் கூட்டம் நடமாடிய ரோம் நகரின் அரசியே விருந்துண்ண அழைக்கும்போது, கேட்கவேண்டுமா கேளிக்கையின் போக்கை! எதிரியின் யானையைக் களத்திலே தழுவிய தோள்கள், அந்தப்புரத்திலே அரசி மெசாலினாவின் தோள்களைத் தழுவலாயின. மதியையும் தென்றலையும், மலையையும் மாநதியையும், களத்தையும் காவலரையும் பாடிய கவிதா விற்பன்னர்கள், மெசாலினாவின் மேனியில் மேதினியின் சோபிதத்தையும், அவளது கண்களிற் நீலவொளியையும், புன்னகையில் பொன் தட்டில் புதைத்த வைரச் சித்திரத்தையும், அவளது ஆனந்த மூட்டும் பேச்சிலே அபிதான சிந்தாமணியையும் கட்டிலறையிலே காலத்தின் கனிவையும் கண்டோம் கண்டோம் என்று கவிபாடுவராயினர்! ராச தந்திரிகள். அந்த நாட்டு மன்னனுக்கும், இந்த ஏந்தலுக்கும் எத்தகைய பகைமையை, எந்த நாட்டு அரசன் மூலம் கிளப்பிவிடலாம் என்ற சதி செய்யும் வேலையையும் மறந்து மாலையில் மெசாலினாவிடம் சாலையில் கூடிப்போவதா. அவளது அடிவருடும் நேரம் எப்போது என்ற இத்தகைய யோசனைகளில் காலந்தள்ளினர்.

கரி பரி காவலர் தாக்கினாலும் கலங்காத கற்கோட்டைபோல் இத்தகைய இயல்பினரான எண்ணற்றவர்கள் மெசாலினாவின் அன்பைப்பெற "நான், நீ என்று முந்திக்கொண்டும், முறுவல் மாறாது, முகமன் குறையாது, "வருக! வருக!" என்று வாஞ்சையுடன் அழைத்து உபசரித்தாள் மெசாலினா. ஊரெங்கும் இதுபற்றியே பேச்சு! விழாவில் எல்லாம் இதுவே வேடிக்கை! வேந்தனோ, விருந்து தவிர வேறொன்றிலும் நாட்டம் கொள்வதில்லை. யாரேனும் மெசாலினா பற்றிக் குறை கூறினாலும், கோபம் கிளம்பும் அரசனுக்கு! கோபம் பசியைக் கிளப்பிவிடும். பசி வந்தது பாவையை மறந்து "உணவு எங்கே?" என்று கேட்டுப் பெற்று உண்டு உறங்குவான் மன்னன்.

மெசாலினா பாடு கொண்டாட்டம்! இரண்டோ ஆடவர் மட்டுமே அவளுக்கிணங்க மறுத்தனர். அதனால் மாண்டனர்.

ரோம் சாம்ராஜ்ய செனட் சபை மெம்பரும் சீலருமான வினிஷியஸ் என்பவர்மீது மெசாலினா வலை வீசினாள். ஊராள்வோனின் மனைவிக்கு இணங்கி ஊராள்வோனுக்கும், ஊருக்கும் ஊறுதேடும் உலுத்தனாகேன் என்று அவர் கூறிவிட்டார். மெசாலினா மயக்கினாள். அவர் மறுத்துவிட்டார். கெஞ்சினாள் கேட்கவில்லை; மிரட்டினாள். இணங்கவில்லை; எதிர்த்தாள், ஏமாறவில்லை! ஆனால் சீறிய நாகம் தீண்டுவதுபோல் மெசாலினாவின் கோபம் அவரைத் தீண்டி, சவக்குழியில் சேர்த்தேவிட்டது. அதற்கான சதியை மெசாலினா தயாரித்து தனது சேவகர் மூலம் நிறைவேற்றிவிட்டாள்.

அரண்மனையிலேயே மெசாலினா தனியாக ஒரு கூடம் அமைத்தாள். காமவேள் நடன சபாமண்டபம் அது! அங்கு சதங்கை ஒலியே சனாகீதம்; வளையல் சத்தமே வீணை; "வா உட்கார் மது அருந்து, மலர் சூடு" என்பவைகளே பேச்சு, செயலோ...!

எவரும் வரலாம்! இன்பம் பெறலாம்! எவருக்கும் இல்லை என்றுரைக்காத இலக்கிய மனமும் இறுகிய உடலும் படைத்த மெசாலினா, வந்தோரைக் கண்டானந்தித்து, வராதவரைக் குறித்து வருந்தி வானம் வெளுக்கும்போது வாடி, சூடிய பூ துவையலானதைக் கண்டு புன்னகைக்கொண்டு, சுந்தரனே! நாளை மறவாதே! சுகுணா உன் தோழனையும் அழைத்து வா! பிரதாபா, உன்மீது எனக்குக் கோபம் தான், "நீ மூன்று நாட்களாக வரவேயில்லை" என்று வந்தவரிடம் கொஞ்சிப் பேசி வழியனுப்பி வைத்து வாட்டம் தீர வானில் மீண்டும் நிலவு தோன்ற வேண்டுமே என்று சோபிப்பாளாம், அந்த ஒய்யாரியின் ஓயாமடத்தில், கண்டதையும் விண்டதையும் கொண்டதையும் கொடுத்ததையும் எண்ணக்களித்த ஆடவர் அநேகர்.

இவள் இங்ஙனம் காமக் கூத்தாடிக்கொண்டிருக்கையில் கலைக் கூத்தனொருவனைக் கண்ணுற்றாள்.

மனீஸ்டர் என்ற வாலிபன் நடனத்தில் சிறந்தவன்: நாடு புகழ வாழ்ந்தவன். அவனது அபிநயங்களைக் கண்ட அரசி அடங்கா ஆசை கொண்டாள். "நர்த்தனம் புரியும் நல்லோய்! சிந்தையை வென்றாய் பொல்லோம்!" என்றாள்.

நடனக்காரனின் மனம் நர்த்தனமாடிற்று. அரசியின் நேசம் கிடைக்கும் என்பது ஆனந்தம் தருவதென்றாலும், அரசன் அறிந்தால் என்னாகும் என்பதை எண்ணி அஞ்சினான்.

"உல்லாசி! உனது நேசம் எனக்குத் தேவை, ஆனால் என் உயிரும் எனக்குத் தேவையன்றோ!"

"உயிர், உடல் யாவையும் அன்புக்கு அர்ப்பணம் செய்துவிடு, கலையில் வல்லவனே! சிலையா நீ! சிந்தனையில்லையா?" நான் உன்னை அழைக்கிறேன், நடுக்கம் உனக்கேன்?

"தேன் கூட்டிலே வண்டிருக்குமோ?"

"வண்டு பாடும், வேறென்ன செய்யும்?"

"கொட்டிடின் கொடிய நஞ்சாகுமே?"

"அஞ்சாதே ஆடிடும் அழகனே! நான் மருந்திடுகிறேன்."

"மனோகரி! மன்னிக்க வேண்டும். கொற்றவனின் கூர்வாள் என் உயிர் குடிக்கும். அவராணை பெறாது நானேதும் செய்யேன்."

மெசாலினாவுக்கும் நடன சுந்தரன் மனீஸ்டருக்கும் இதுபோல் உரையாடல் நடத்திருக்கவேண்டும். அவன் அரசனுக்கு அஞ்சினான். அதற்கோர் சாகசம் செய்தாள் மெசாலினா.

அரசனிடம் சென்றாள்; கெஞ்சினாள்; குலவினாள்; அவன் குழைந்தான்! "நாதா! இதோ பாரும், இந்த நடனக்காரன் என் பேச்சை மதித்தானில்லை. நான் இடும் பணியைச் செய்ய மறுக்கிறான்" என்றாள். "அவ்வளவு அகம்பாவமா அவனுக்கு?" என்று அரசன் சினந்தான். காவலரை ஏவினான். கலை வல்லோன் வந்தான். "அரசியின் பேச்சைத் தட்டாமல் இனி நட, இது என் கட்டளை" என்றான் அரசன். "தங்கள் சித்தப்படி" என்றான் நர்த்தன நாயகன். மெசாலினா மெல்லச் சிரித்தாள். மேளம் தட்டி விட்டது; பிறகு கீதமும் பரதமும் இருந்த விதத்தை விஸ்தரிப்பானேன்!

இது மட்டுமல்ல அவளது சாகசம்! கணவனிருக்கையிலேயே அவன் சம்மதம் பெற்று, வேறொருவனையும் கல்யாணம் செய்துகொண்டாள். காதகி, பிரபல குடும்பத்திலுதித்து சைலான்ஸ் என்ற இளைஞன் காந்தக் கல்லானான்! மெசாலினாவின் உள்ளம் அவனிடம் சென்றது. அவனைக் கல்யாணமே செய்துகொண்டாள். தன் கணவனிடமே ஒரு கட்டுக் கதையை கூறினாள். மடையன் அதை நம்பினான், "காலக் கோளாறால் கணவனுக்குத் தீங்குண்டாகுமாம். ஆகவே கண்ணாளா! நான் அதைத் தடுக்க சைலானசை ஒப்புக்கு மாலையிடுகிறேன். அது செய்தால் உனக்கு வர இருக்கும் ஆபத்து அவன் தலைமீது சாயும்" என்று மெசாலினா கூற, மட மன்னன் நம்பி, மனைவிக்கு ஏற்பாடு செய்தான், மணமும் நடந்தது. மாளிகையிலிருந்த பொருள்கள், ஆட்கள், சைலானஸ் மனைக்குக் குடியேற. மெசாலினா சைலானசின் சயனக்கிருகம் சேர்ந்தாள்! அரசன் அதுசமயம் வேற்றூர் சென்றிருந்தான். இங்கு கொள்ளை! கொள்ளை!! கொள்ளை!!!

"கேட்பவர், பார்ப்பவர் அற்ற இடம் கேளிக்கைக்கு மிக ஏற்ற இடம்" என்றாகிவிட்டது சைலானசின் வீடு.

இது மெசாலினாவின் மாஜி காதலர்களுக்கு மனவேதனையைத் தந்தது. மன்னனிடம் விரைந்து சென்று விஷயத்தைக் கூறினர். விஷமென ஏறிவிட்டது வேந்தனுக்குக் கோபம். விரைந்தோடி வந்தான் தலைநகருக்கு. தலைமறைவாகத் திரியலானான் சைலானஸ். தத்தளித்தாள் மெசாலினா. பிடித்திழுத்து வரச்செய்தான். பாதகப்

பட்டாளத்தை! மெசாலினாவின் மையலுக்கு இரையானவர்கள், மன்னனின் ஆணைக்கு இரையாகினர்; இறந்தனர். மன்னனின் மனம் இருக்கும் நிலை தெரிந்துகொண்டான் மெசாலினாவின் மாஜி வேலைக்காரனொருவன், அரசிமீது வஞ்சந்தீர்க்க முனைந்தான். மெசாலினா சிங்காரத் தோட்டமொன்றில் கண்களில் நீர்புரள தலைமாட்டில் தாயார் அமர்ந்துகொண்டு, ஐயோ!' என்று அலற இனி ஏது வாழ்வு என்று தீர்மானித்து இன்பரச கடலில் நீந்திய நாட்களை நினைத்தழுதுகொண்டிருந்தாள். பணியாள் பதட்டமாகப் பேசினான். பாராள்வோனின் கோபத்தின் எதிரொலியை அதனால் அறிந்தாள் மெசாலினா. சிறு ஈட்டியை எடுத்தாள், நெஞ்சில் செருகி மடியத் துணிந்தாள். ஆனால் கை நடுங்கிற்று; கருத்துக் குழம்பிற்று; கண்ணீர் கரை கட்டா நதியென்றாகிவிட்டது; காவலாள் கண்டான். தனது கட்கத்தை வீசினான். மெசாலினா மாண்டாள்.

மெசாலினா மாண்ட செய்தி மன்னனுக்குத் தெரிவிக்கப்பட்டது. அந்த நேரத்தில் அவன் உணவருந்திக் கொண்டிருந்தான். அவன் பசி அவனுக்கு! தலையசைத்தான். "திராட்சை ரசம் எங்கே?" கொண்டு வந்தனர். குடித்தான்.



# அக்ரிப்பானாவின் அக்ரமம்

"அந்த ஆக்டே என்பவளிடம் அவன் அவ்வளவு சொக்கிவிட்ட காரணம் என்னடி சேடி?"

"இது தெரியாதா அரசி! மணமுள்ள மலர், சுவையுள்ள கனி, சுந்தரமான மாது இவைகளிடம் அநுபவிக்கத் தெரிந்தவர்கள் அடிமையாகிறார்கள்"

"ஆக்டே அழகியா?"

"சந்தேகமென்ன! அடிமையாக இருந்தவள்தான். ஆனால் நல்ல வனப்புள்ளவள். வசீகரிக்கும் குணம் படைத்தவள். அவளிடம் உமது மகன் அடிமை போலாகி விட்டார். அவள் எள் என்னுமுன்னம் எண்ணைபோல் நிற்கிறார். மேலும் அம்மணி! அவள் மிக்க தளுக்குக்காரி, ஒய்யாரி! அலங்காரி!

"தெரிகிறது விஷயம் அவன் சிறுவன்; அவளுடைய அழகும் அலங்காரமும் அவனை வென்றுவிட்டது. ஆமாம்! என்னுடைய நாட்களில் நான் இரு என்றால் இருந்து, நட என்றால் நடந்து கிளாடியஸ் மன்னன் எனக்குக் கைதாகி இருக்கவில்லையா? என் ஏவலைத்தானே அவர் ரோம் சாம்ராஜ்ய சட்டங்களைவிட மேல் எனக் கருதினார். என்னை தேவதையைப் பூசிப்பதுபோல் பூசித்தார். அன்று நான் இருந்தவிதம் எப்படி? எத்தனை மன்னர்கள் என்முன் மண்டியிட்டுக் கிடந்தனர்! எத்தனை மலர்ச் சோலைகளில் என் மேனியின் பொலிவை, கண்களில் கனிவை, பேச்சின் பிகுவைப் போற்றியவர் எவ்வளவு? ரோம் சாம்ராஜ்யம் மட்டுமா என் புகழ் வீசிற்று? வெளிநாட்டு வேந்தர்கள் "வேல் விழியாளே! கண்களுக்கு விருந்தே! களைத்த எம் மனதுக்கு மருந்தே என்று என்னை வர்ணித்ததைக் கேட்ட காதுகள் இவை. ஜூலியஸ் சீசரின் உடலிலே ஈட்டி புகுந்ததுபோல் என் கண் வீச்சு எத்தனை பேரின் இருதயத்திலே புகுந்தது! எவ்வளவு வெற்றிகள் பெற்றது! இந்தக் கரங்களைத் தீண்டினால் போதும் என்று தெண்டனிட்டுக் கிடந்தவர்கள் பலர்! இப்படி வாழ்ந்த நான், இன்று வதைவதா! செல்வாக்கை இழந்து விடுவதா? ஒரு அடிமைச் சிறுக்கியின் அலங்காரமா என் அரசபோகத்தையும் அதிகாரத்தையும் அழிக்கத் துணிவது? -தோழி! நீயே கூறு; என் அழகு குறைந்திருக்கலாம் காலப்போரினால். ஆனால் இந்த வைரத்தை மீண்டும் ஜொலிக்கவைக்க முடியாதா? இந்த ஆக்டேயிக்குத் தெரிந்த தளுக்கு எனக்குப் பால பாடம்! அவள் செய்து காட்டும் அலங்காரம் எனக்கு ஆரம்பக்கல்வி.

பார்க்கிறேன் ஒரு கை அவளை, பாங்கி! என் பட்டாடைகளை எடுத்து வா இப்படி! பரிமளப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு வா இங்கே! நிலைக்கண்ணாடியைக் கொண்டுவா! இதோ பார். நான் பழைய மோகனாங்கியாகக் காட்சியளிக்கிறேன். சுருங்கிய தசையை மினுக்க வைக்கும் தைலம் இல்லையா? காலம் உண்டாக்கிவிட்ட களங்கத்தை வெல்ல எனக்குத் தெரியும்! சாம்ராஜ்யத்தைச் சுழலவைத்த இந்தக் கண்களுக்கு மீண்டும் வேலை தருவேன்! அடிமை ஆக்டேயிடம் சொக்கிவிட்ட அந்த நீரோவை நொடியிலே நான் கவர்கிறேன்!"

"என்ன? என்ன? இதென்ன பேச்சம்மா! நீரோ யார்? நீர் யார்? உமது மகனை நீர் மயக்குவதா? இதென்ன அக்ரமம்! ஆக்டேயிடம் சொக்கிக்கிடந்தால் அதை மாற்ற நீர் அவனுக்கு மையல் ஊட்டுவதா! நாராசம் போன்றிருக்கிறதே உமது பேச்சு! நீரோ உமது மகன்; நீர் அவன் தாய்.

"நீரோ இந்நாட்டு மன்னன்! நான் இந்நாட்டிலே அதிகாரமிழந்து அந்தஸ்து குறைந்துள்ளவள். எனக்கு இப்போதுள்ள நிலைமாறி நான் மீண்டும் ஒளிவீசி வாழவேண்டுமானால், அரசனின் தயவுவேண்டும், அரசன் அன்னை என்பதற்காக எனக்கு அன்போடு தரவேண்டிய உரிமைகளை, உன்னதப் பதவியை, அதிகாரத்தைத் தர மறுக்கிறான். தளுக்குக்காரிகளுக்கே அவனுடைய தர்பாரில் இடங்கிடைக்கிறது, நான் பழையபடி தர்பாரில் வாழவேண்டும். எனவே தளுக்குக்காரியாகித்தானே தீரவேண்டும்? அன்னைக்கு அவன் தர மறுக்கும் அதிகாரத்தை நான் அலங்காரியானால் தர முன்வருவான். நீரோ என் மகன்- முன்பு, நீரோ இன்று அரசன்! நான் அந்த அரசனை வென்று, அவனை ஆக்டே பாப்பேயா முதலிய அவனுடைய ஆசைநாயகிகளிடமிருந்து பிரித்துவிடுவேன். கொண்டுவா அலங்காரச் சரக்குகளை! அக்ரிப்பானாவை அன்னையாகக் கண்டவனின் கண்களுக்கு நான் ஆயிரம் ஆக்டோக்களைத் தோற்கடிக்கக் கூடிய அலங்கார வல்லியாகக் காட்சி தருவேன்."

"கேட்கவும் கூசுகிறது! நினைக்கவும் நெஞ்சு வலிக்கிறது. கேவலம் அதிகாரத்துக்காகவா, மகனை மருவ அழைக்கும் மாபாதகம் செய்யத் துணிகிறீர்கள்?"

"போடி முட்டாளே! அதிகார வல்லியாக நான் இருந்ததால்தான். நான் உட்கார்ந்துகொண்டிருக்க, நீ நின்றுகொண்டு சேவகம் புரிகிறாய்! அதோ அவன் தரித்திருக்கும் மணிமுடி என் தளுக்கு அவனுக்குத் தேடிக்கொடுத்தது! என் சிங்காரத்தால் சீமானின் மனைவியான நான்,

பின்னர் சாம்ராஜ்யாதிபதியின் தேவியானேன். அதிகாரம் வேண்டாமாம்? அறிவற்றவளே! எடு அலங்காரப் பெட்டியை, மகன் மாதாவின் சௌந்தர்யத்தைக் காணட்டும். ஆக்டே என் எதிரிலே தலைகவிழ்ந்து நிற்கட்டும். அவன் பிறகு என்னைத் தூற்றட்டும், கவலையில்லை. இன்று எனக்கு அதிகாரம் தேவை."

அம்மணி! நீரோ தங்கள் இரத்தம். தங்கள் சதை தாங்கள் பெற்றெடுத்த மகன், இதையுமா மறப்பது."

"மறந்தவர் யார்? அவன் மறந்தான், ஆக்டேயின் அழகிற் சொக்கி, அவனுக்கு ஞானோபதேசம் செய்வேன் நான்"

ஞானோபதேசம் செய்வதாகக் கூறிய மாபாதகியின் பெயர் அக்ரிப்பானா. அவள் ரோம் சாம்ராஜ்யத்தை ஆட்டிப் படைக்கவே அழகு தனக்குக் கிடைத்ததென்று கருதிக்கொண்டிருந்தாள். தன் செல்வாக்கு, தனது மகன் மன்னனானது தன் மோகனாஸ்திரத்துக்குப் பலியாக்கத் துணிந்த அக்ரமக்காரி. அரண்மனையிலேயே அவள் மேலே தீட்டப்பட்டபடி பாங்கியருடன் பேசிக் கலந்தாலோசித்து, அக்ரமக்காரியத்திலும் இறங்கினாள். நல்லவேளையாக அவளது மகன் அவளுக்குப் பலியாகவில்லை. மகனை மயக்கியேனும் அதிகாரத்தில் புரள வேண்டுமென்ற பேராசைப் பித்தம் கொண்டவள் அக்ரிப்பானா, அவளது வரலாறு இது.

மெசாலினா, உடலும் உள்ளமும் பசி கொண்டவள். காமாந்தகாரி, எனவே அவள் பலரைக் கூடினாள். பாரில் மனித வேட்டையாடினாள். ஜூலியா குஷாலாக வாழ வேண்டும் என்ற எண்ணங்கொண்டவள். எனவே அவள் கண்டவரிடம் கொஞ்சி காலங்கழித்தாள். இந்த அக்ரிப்பானாவு இவர்களைப் போன்றே பலரிடம் குலவியவள். ஆனால் இவள் தனது உடலை உரசி ஊராளும் நிலைமை பெறவேண்டும் என்ற ஒரே நோக்கங்கொண்டவள். அதற்காக தனக்கு யாராரின் உதவி தேவையோ அவர்களை உல்லாசப்படுத்த வேண்டி, அதற்குத் தனது அழகைப் பயன்படுத்தியவள், கெண்டையை வீசி விரால் பிடிப்பது போன்றதாகக் கருதினாள். பலத்தை தன் படுக்கையறை விருந்தினராக்கி பாராளும் பதவி பெற்றாள். கனியைக் கசக்கித்தானே கனிரசம் பெறவேண்டும்! அதுபோல் பலரைத் தழுவி, பிறகே பக்குவமான நிலை பெறமுடியும் என்று இந்தக் குடிகேடி எண்ணினாள். இவளது காலம் முழுவதும், இத்தகைய வேட்டைக்கும் வேட்டைக்காட்டிலே உலவுமே சரியாக இருந்தது.

அக்ரிப்பானா அழகி என்பதை விளக்கத் தேவையில்லை.

அழகுதானே அரண்மனைக்கு நுழைவுச்சீட்டு! அதை அவள் பெற்றிருந்தாள். கெம்பீரமான உருவம், கமலக் கண்கள், கார்நிறக் கூந்தல், கண்ணாடிக் கன்னங்கள், புன்னகை அதரம், காந்த சக்திக்கல்! பிறந்த குடியோ பெருமையின் இருப்பிடம், அகஸ்டஸ் பேரரசின் பேத்தி! அவளது உள்ளமும் உடலும் பண்பட்டு விரிந்த மலராகி, மணம் பரப்பியதும், டோமிடஸ் என்பவனை மணம் செய்துகொண்டு வாழ்ந்து வந்தாள் - அப்போது ஒரு மகனை ஈன்றாள்.

அக்ரிப்பானாவுக்கு அரண்மனை வாசம் கிடைத்தது. நெடு நாட்களுக்குப் பிறகேயாகும்.

கிளாடியஸ் ஆட்சிக்கு வந்ததும், அக்ரிப்பானாவுக்கு அழைப்பு கிடைத்தது. அதற்குள் அக்ரிப்பானாவுக்கு கணவன் என்ற விலங்கு கத்தரிக்கப்பட்டு விதவைக் கோலமெனும் விடுதலை கிடைத்திருந்தது. எனவே அவள் அரசனுக்கு விருந்தாகும் பக்குவமான பண்டமானாள். வழக்கமான சந்திப்பு, சரசம், தூது, துடிப்பு முதலியவற்றுக்குப் பிறகு அக்ரிப்பானா கிளாடியஸைக் கல்யாணம் செய்துகொண்டு அரண்மனை வாசியானாள். இந்நிலையைப் பெற, அக்ரிப்பானா பலரைக் காதலராகக் கொண்டு, தனது கவர்ச்சி பற்றி மன்னனிடம் செய்தி கூறச் செய்து, பிறகே பட்டமகிஷியாக முடிந்தது. இந்த மாஜி காதலர்கள் இவள் அரசியானதும் பிரதானியாயினர். கொலு மண்டபத்தில் இத்தகையவர்களே நிறையலாயினர்; பாராளும் மன்றத்திலே இதோ பச்சை நிறச் சால்வையும் பால் நிற அங்கியும் தரித்துக்கொண்டுள்ளவர் எந்தக் களத்திலே வென்றவர்? எந்த நாட்டை ரோம் சாம்ராஜ்யத்துக்குப் பணியச் செய்தனர்? என்று கேட்பர் முன்பெல்லாம் - ரோம் செனட் மெம்பர்களை, அத்தகைய வீரர்கள் கோட்டமாக செனட் விளங்கியது. அக்ரிப்பானாவின் காலத்திலோ, "அரசிக்கு இத்தகைய உதவியை இந்த நேரத்தில் இவ்விதம் செய்தவர் இவர்" என்று கூறித்தான் செனட் மெம்பர்களின் பிரதாபத்தைக் கூறமுடியும் "அரசிக்கு தூதுவர் மாஜி காதலர். சதிவேலைக்குத் துணை புரிந்தவர்கள். அரசியின் ஆசைக்குப் பங்கம் விளைவித்தவர்களைக் கொன்றவர்கள் என்றும் இத்தகையவர்களே கொலுமண்டபத்திலும், ஆட்சி மன்றத்திலும் குவியலாயினர். அரசன் கிளாடியசே அக்ரிப்பானாவின் அடிமையானாள்; அரசி அக்ரிப்பானாவின் கட்டளைக்காக வெளிநாட்டு வேந்தர்களும் வீரர்களும் ராஜதந்திரி களும் காத்துக்கொண்டிருப்பர். உலகின் பல பாகங்களிலுமிருந்து, அவளை மகிழ்விக்கப் பலர் பலவிதமான பரிசுகளை அனுப்புவர்! தங்கத்தேர், அதிலே வெண்புரவிகள், பொன் இழைத்த ஆடை, அங்கமெங்கும் பணிபூண்டு,

அரசி அக்ரிப்பானா ஊர்வலம் வருவாள். அவளாதரவு பெற்றோர்க்கு அரச அவையிலே இடம் மற்றவருக்கோ காராக்கிரகம்!

அரசிக்கு இனி அரசனால் ஆகவேண்டியது ஒன்றுமில்லை. தர்பாரிலே இடங்கிடைத்துவிட்டது. மகனுக்கும் செல்வாக்கு வளர்ந்துவிட்டது. பட்டம் அவனுக்கே என்பதும் நிச்சயமாகிவிட்டது. கிளாடியஸ் உயிருடன் இருந்து தரவேண்டியதனைத் தந்தாகிவிட்டது. இனி இறந்து தரவே அவனிடம் பொருள் இருந்தது. அதுவே அவனுடைய கிரீடம்! அதைப் பெற அரசி தீர்மானித்துவிட்டாள்.

அரசனுக்கு ஏதோ நோய். அதற்கு மருந்திடலாயினர். அரசி விஷமூட்டினாள். ஜெனோபன் என்ற வைத்தியன் மருந்துதர வந்தான். அவனையும் அரசி சரிப்படுத்திடவே, அவனும் நஞ்சே தந்தான். மன்னன் மாண்டான்.

இவ்வளவு பாடுபட்டு மகனை மன்னனாக்கினாள். அவனுடைய ஆட்சியோ தாய்க்கு விரோதமாகவே ஆரம்பித்தது. மகன் பேருக்கு மன்னனாகவும் உண்மையான ஆட்சி தன்னிடமும் இருக்கவேண்டும் என்பது அக்ரிப்பானாவின் கருத்து. மன்னனான மகன் டோமிடஸ் என்ற பெயரை நீரோ என்று புதுப்பித்துவிட்டு பட்டம் சூட்டிக் கொண்டதுடன், தனது சகாக்களுடன் சேர்ந்து ஆளத்தொடங்கினான். ஆக்டே என்ற அழகியுடன் குலவினான். அதிகாரத்தில் அன்னைக்கு இடமளிக்க மறுத்தான். அதற்குப் பிறகுதான், மகனை வேறு மாதர் மயக்கி, தர்பாரில் இடம் பெறுவதைத் தடுக்க தானே தன் மகனை மயக்கிடத் துணிந்தாள் மாதா! அந்தச் சம்பவமே முதலிலே தீட்டப்பட்டிருக்கிறது.

அந்தந்த பாதகத் திட்டப்படியே அக்ரிப்பானா ஆடை அணிகளால் தன்னை அலங்கரித்துக்கொண்டு நீரோவுடன் சரசமாடவும் ஆரம்பித்தாள்! அவனுடைய மனம் பேதப்படும்படியாக, காமக்குறி களுடன் நடிப்பாள்; போவாள்; ஆடை நெகிழ நிற்பாள். மேல் விழுந்து உபசரிப்பாள், உல்லாச பேச்சுக்கள் பேசுவாள்; இவைகளை அந்த மகனும் வெறுத்துத் தள்ளவில்லை? எத்தகைய மகன்! எத்தகைய தாய்!

ஆக்டேயிடம் ஆசை அதிகரித்திருத்ததால் நீரோ மாதா வெட்டிய மாபாதகக் குழியில் விழவில்லை. அதற்கு மாறாக அக்ரிப்பானாவை ஒழித்துவிடத் தீர்மானித்தான்.

ஆற்றோரமாக உள்ள ஓர் நகரில் அரசன் ஒரு விருந்து ஏற்பாடு செய்தான். அக்ரிப்பானாவும் விருந்துக்கு வரவழைக்கப்பட்டாள். காதலனை நோக்குவதைப்போல மகனை அவள் பார்த்தாள்! தாயைத்

தழுவவேண்டியதைவிட சற்று அதிகமான சல்லாபத்துடன் அக்ரிப்பானாவை நீரோ தழுவி கொண்டான்! ஆனால் அதே நேரத்தில் அவளை ஒழிக்க ஏற்பாடு செய்திருந்தான். பட்டத்தரசிகள் செல்லும் படகு அதிலே ஏறிக்கொண்டு அக்ரிப்பானா கிளம்பினாள். இடையிலே படகு கவிழ்ந்து சதியினால் பலர் இறந்தனர். அக்ரிப்பானா தப்பினாள்.

விருந்து நடக்கும் ஊருக்கு மீண்டும் வந்தாள். நீரோ இதனைக்கேட்டு. சதி பலிக்காதது கண்டு சலித்துக் கொண்டான். உடனே அவனுடைய ஆட்களில் துணிந்த பேர்வழி அரசனிடம் கட்டளை பெற்றுக்கொண்டு அக்ரிப்பானாவின் மனை சென்றான். அவன் வந்ததும் வேலையாட்கள் மிரண்டோடினர். பழுப்பு நிறமாக விளக்கு எரிந்துகொண்டிருந்தது, பதைப்போடு படுக்கையில் கிடந்தாள் அக்ரிப்பானா. அவள் எதிரே வந்து நின்றான், கொலை செய்யத் துணிந்தவன்- கூவினாள் அக்ரிப்பானா! கொல்ல வந்தவனை நோக்கி, "நீரோ என்ற கொடியவனைப் பெற்ற இந்த வயிற்றை முதலிலே கிழித்தெறி" என்று மனம் நொந்து கதறினாள். அவனுடைய வாள், அவளுடைய தேகத்தில் பல இடங்களில் பாய்ந்தது. அக்ரிப்பானா மாண்டாள்! ரோம் நாட்டு ஆபாசக் களஞ்சியம் அழிந்தது!



# அழகியும் ஐந்நூறு கழுதைகளும்

வா யுவேக மனோவேகமாய்ச் செல்லக்கூடிய புரவிமீதமர்ந்து, வேள், வாள் ஏந்திய வீரர்கள் நுரைதள்ளும் வாயுடைய புரவிகளின் மீதேறி முன்னும் பின்னும் வரச்சென்று வெஞ்சமர் புரிந்து வெற்றிக்கொடி நாட்டிய வீரன்போல், ஐந்நூறு கழுதைகள் முன்னால் செல்ல, தங்கலாடமும் தங்கமேலங்கியும் அணிந்த குதிரைகள் பூட்டப்பட்ட அழகிய தேரில் அமர்ந்துகொண்டு, பொன் கொடியோ, பொலிவின் வடிவோ, பூங்கொம்போ, என்று பலரும் எண்ணும் வண்ணம் எழிலமைந்த பாபேயா பலஸ்தீன் பரிமளக்கந்தம் பூசி, எகிப்து நாட்டுத் தைலத்தைத் தடவிக்கொண்டு, விலைமதிக்கமுடியாத ஆபரணாதி களை அணிந்துகொண்டு, ரோம் நகரில் ரமணியமாக ஊர்வலம் வருவாள்! "வருக! வருக! என்று வெற்றி வீரரை மக்கள் வாழ்த்தி வரவேற்பதுபோல, பாம்பேயாவை மந்திரி பிரதானியரும், காவலர், சேவகரும், "அரசனின் அன்பின் இருப்பிடமே வருக! அழகின் அவதாரமே வருக! என்று கட்டியங்கூறி வரவேற்பர். "இகலோகத்திலுள்ள சுகபோகத்தில் இன்னும் என்ன பாக்கி இருக்கிறது, காவலர்கள் ஏவலாக உள்ளதைக் கண்டு களித்து, பாப்பேயா தனது நிலைமையைக் கண்டு பூரிப்பாள். இவ்வளவு நிலை வந்ததற்குக் காரணம், தனது அழகு என்பதை அவள் மறக்கவில்லை. "ரோஜா அழகாக இருப்பதனாலன்றோ, செடியிலுள்ள முள்ளையும் கவனியாது, அதனைப் பறிக்க மக்கள் முன் வருகின்றனர்! தேனீக்கள் கொட்டினாலும் தாங்கிக்கொள்ளலாம் என்று மக்கள் துணிவு கொள்வதற்குக் காரணம் என்ன? தேனின் சுவைதானே! அலையும், சுழலும் சுறாவும், பிறவும் தாக்குவதையும் பொருட்படுத்தாது மக்கள் மூச்சை அடக்கி கடலில் மூழ்குவது உள்ளே விலையுள்ள முத்து கிடக்குமென்றுதானே! ஆயிரம் மாயிரமடி சுரங்கத்தை வெட்டி, அந்தகாரத்தில் நுழைந்து பார்ப்பது, தங்கம் கிடைக்கிறதென்பதற்காகத் தானே, அதுபோல் அழகு இருக்கிறதென்பதற்காகத்தானே மன்னன் அன்னை, மனைவி, ஆசைநாயகி ஆகியோரையும் மதியாது விலக்கி, ஊரார் ஏசுவரே என்பதுபற்றிக் கவலைகொள்ளாது, நண்பனின் மனைவியை நாம் களவாடுவதா என்பதுபற்றிக் கவலைகொள்ளாது நம்மை நாயகியாக்கிக் கொண்டான், மன்னனை இவ்வளவும் செய்யவைத்த அழகு மங்குமானால் என்னவாகும்! தேனின் சுவை போயின் பயன் என்ன? தேஜஸ் குறைந்தவளைத் தேடுவாருண்டோ! என்று பாப்பேயா யோசித்து இயற்கையாக அமைந்த எழில் குறையாதபடி செயற்கை முறைகளைச் செவ்வனே செய்து கொண்டாள்.

அழகுக்கு அழகு செய்வது மட்டுமல்ல, அழகு அழியாதிருக்க அனேகம் வழிதேடினாள். அவைகளில் ஒன்றுதான் ஐந்நூறு கழுதைகள்! கழுதையின் பாலிலே குளித்தால் மேனியில் மினுமினுப்பும், மிருதுவும் அதிகரிக்குமாம். காலத்தால் மேனி சுருங்கி, சதை பசையையும், பளபளப்பையும் இழக்கும். கழுதைப்பால் இதனைத் தடுக்குமாம். இதன் பொருட்டு பாப்பேயா ஐந்நூறு கழுதைகளைத் தனது அந்தப்புரத்தில் கட்டி வைத்தாள் அனுதினமும் கழுதைப்பாலிலே தான் ஸ்நானம்! அகில் புகையினால் உடலெங்கும் மணம் புகவைத்தல்! அழகபாரத்துக்கு அரபு நாட்டு வாசனைத் தைலம். இங்ஙனம் அழகு வளர அவனியில் எங்கெங்கு என்னென்ன முறைகள் கூறுவரோ அவ்வளவையும் முறை தவறாது செய்துகொண்டு, நிலைக் கண்ணாடி முன் நின்று, தனது அழகைக் கண்டு தானே ஆனந்தித்து, கூந்தல் சரியாக இருக்கிறதா என்பதைத் தடவிப் பார்த்துவிட்டு, களம் புறப்படும் வீரன்போல் கண்கவரும் கவர்ச்சி சிந்தாது சிதையாது இருக்கிறதென்பதைத் தெரிந்து கொண்ட பிறகே, பாப்பேயா தர்பார் செல்லுவாள்!

பாப்பேயா நீரோ மன்னனின் இரண்டாம் மனைவி. நீரோ அவளுக்கு மூன்றாம் புருடன்!! நீரோவின் முதல் மனைவி, ஆக்டேவியா என்பவள். அடக்கமும், அன்பும் அறிவும் பண்பும் கொண்ட ஆக்டேவியா, நீரோவுக்குப் பிடிக்கவில்லை. அவன் சிங்காரவல்லியை வேண்டினான்; ஆக்டேவியா பெருந்தன்மைக் குணமுடையவள்; அவளுக்கு ஆடம்பரம் தெரியாது. நீரோவின் நாட்டம் ஆக்டே எனும் அடிமையிடம் வசப்பட்டது. அவளுடன் ஆடிப் பாடிக் காலங் கழித்தான். அவளுடையச் சேர்க்கையில் சொக்கினான். அரசியை அலட்சியஞ் செய்தான். காட்டு ரோஜாவைச் சூடி களித்திருந்த நீரோவின் நேத்திரங்களையும், நினைப்பையும் பாப்பேயா பறித்துக் கொண்டாள். இவளுடைய ஆலிங்கனத்துக்காக, மன்னன் நீரோ, பன்னெடு நாட்கள் பதைக்கும் மனத்துடன் காத்துக்கொண்டிருக்க நேரிட்டது. சுந்தராங்கி சுலபத்திலே கிடைத்து விட்டால், "ஆசை அறுபது நாள், மோகம் முப்பது நாள்" என்று கூறுவார்களே அதுபோல், கண்டோம் கூடினோம், களித்தோம், விட்டோம் என்று காதற்கூத்து முடிந்துவிடும். எனவே மன்னனின் மனம் சதாகாலமும் தன்னை எண்ணி எண்ணி வாடவேண்டும்; ஆசை ஜ்வாலையாக வேண்டும்; தணியாத தாபத்தால் அவன் தத்தளித்து, என்ன நேரிட்டாலும் சரி, எதுவானாலும் சரி, அவள் தனக்கு கிடைக்க வேண்டும் என்ற துணிவு கொள்ள வேண்டும். பிறகு அவனுக்கிசைய வேண்டும்" என்பது பாப்பேயாவின் கருத்து. "நல்ல மூலிகை வேண்டுமானால் காடும் மேடும், மலையும், மடுவும் குறுக்கிட்டாலும் நிற்பரோ! அதுபோல் நான் தேவை என்றால் நாலாறு மாதங்கள்

நோன்பிருக்கட்டும்!" என்று எண்ணினாள். அவ்வளவு சமர்த்து அவளுக்கு! தொட்டதும் துவளுபவளல்ல! கேட்டதும் வரந்தருபவளல்ல! பாப்பேயா போர்களத்திலே திட்டத்துடன் வேலை செய்து எதிரியை முறியடிப்பதுபோல், காமக்களத்திலே தந்திரமான திட்டம் வகுத்துக்கொண்டு முறைப்படி போரிட்டு முடிமன்னனைத் தன் பிடியிற் கொண்டுவந்தாள்.

பாப்பேயா புகழ்மிக்கக் குடியில் பிறந்தவள். புன்னகை பூத்த முகத்தழகும், கீதக் குரலழகும், கிண்கிணி சதங்கை ஒலி போன்ற பேச்சழகும் பெற்றவள். நகைச்சுவையுடன் பேசுவதில் மிக்க திறம் பெற்றவள். மன்னர்களிடம் மண்டலங்களின் ஆட்சி முறை பற்றிய நுணுக்கம் பேசுவாள். படைத்தலைவர்களிடம் போர் முறை பற்றியும், ஓவியக்காரரிடம் இயற்கையின் எழில் பற்றியும் பேசுவாள். ஒவ்வொருவரும் பாப்பேயா பல துறையின் விஷயங்களையும் பயின்றவள் என்று பூரிப்பர். கேளிக்கைக்காரருக்கோ, பாப்பேயாவின் தெரிசனமே போதும்! அவள் பேசிவிட்டாலே ஆனந்த லாகிரிதான்! அவளுடன் உலவினாலோ, போதை கொண்டவர் போலாவர்! அவ்வளவு லயிக்கச் செய்யும் இயல்பு படைத்தவள் பாப்பேயா!

சிறுமியாக இருந்தது முதலே அவள் சிங்காரியாகவே இருந்தாள். சீமான்களின் சிந்தனையைக் குழப்பினாள். அவளது பார்வையும் பேச்சும் அவர்களைப் பரவசப்படுத்தின. அந்த அழகுத் தேவதையை அனுதினம் பூஜித்து வரம் பெற்றான் ரூபஸ் கிரிஸ்பினஸ். பாப்பேயாவை மணம் செய்துகொண்டதும் அதிர்ஷ்டத்தையே அணைத்துக் கொண்டதாக அவன் கருதினான். அவள் புன்னகை புரிய வேண்டும். அதைக்கண்டு நான் மகிழவேண்டும். அவள் அலங்காரம் செய்துகொள்ள வேண்டும்; அதைக் கண்டு நான் பூரிக்கவேண்டும். அவள் ஆனந்தமாக இருக்க வேண்டும்; அது கண்டு நான் மகிழவேண்டும். இதுவே அவன் நோக்கம் மலரின் ரம்மியம் கசக்கினால் கெட்டுவிடும்; கனியின் கவர்ச்சி கல்லடிபட்டால் கெடும்; அதுபோல் தனது காதற்கிழத்தியின் மனம் கோணினால் முகம்கோணும். முறுவல் மறையும். அழகு கெடும்.

ஆகவே அது நேரிடாதபடி சர்வ ஜாக்கிரதையாக பார்த்துக் கொள்ளவேண்டும். இது கிரிஸ்பினசின் இலட்சியம். அவளிடம் அவனுக்கு அவ்வளவு பிரேமை! அவளுடைய சுக வாழ்வுக்காகவே தான் உழைக்க வேண்டும் என்று உறுதி கொண்டிருந்தான். அவளுடைய சந்தோஷத்துக்காக சதாகாலமும், விருந்தும் இசையும் நடத்தி வந்தான். ரோம் நாட்டு ரசிகர்கள் ஆங்குக் கூடுவர்! இசை கேட்க அல்ல; விருந்துண்ணவுமல்ல! வேள் விழியாளைக் காண! பேச அவளுடைய

நேத்திரத்தின் சூழல், அவர்களின் மனதைச் சுழல வைத்தது. அவளுடைய சிரிப்பு அவர்களை ஆனந்த ஆழியிற் தள்ளிற்று. அவள் ஸ்பரிசமோ...! விருந்துக்கு வருபவர் எல்லாம், பாப்பேயாவைப் புகழ்ந்து அவள் "அருள்' பெறவே எண்ணினர். சொகுசான வாழ்க்கை தனக்கே கேடாக வரும் என்பதையோ, விருந்துண்ணும் நேசர்கள் பாப்பேயாவைச் சூரையாடிச் செல்வர் என்பதையோ துளியும் யோசியாமல், "கேளிக்கை அவளுக்குப் பிரியம். ஆகவே அது தேவை' என்று மட்டுமே தீர்மானித்தான் கிரிஸ்பினஸ்.

பாப்பேயாவைச் சூழ்ந்திருந்த சொகுசுகாரர்களில் ஆத்தோ என்ற ஆணழகன் மிக்க சாலக்கான பேர்வழி! கடலின் ஆழத்தையும் கண்டறியலாம். கன்னியர் உள்ளத்தை கண்டறிவது கடினம் என்பார் ஆன்றோர். ஆனால் ஆத்தோ அதை நம்புவதில்லை. மாதரைச் சுலபத்திலே மயக்க முடியும் என்ற நம்பிக்கை கொண்டவன்.

-அநுபவம் உள்ளவன். எனவே அவன் எந்நேரமும் பாப்பேயாவின் அழகை வர்ணிப்பான்; அலங்காரத்தைப் போற்றுவான். உனது மதுரமொழி என்னைச் சிறைப்படுத்திவிட்டது; மாதரசி. உன்னருகே இருக்கும்வரை நான் இன்பபுரியிலன்றோ வசிக்கிறேன். தென்றல் வீசும் இடத்தில், இளநீர் பருகி இன்புற்றிருப்பவன். வெப்பமிகுந்த இடஞ்சென்று வேம்பு பழுத்துத் தொங்கக் கண்டு மனம் வெதும்புவது போல், இங்கிருந்து நான் வேறெங்கு சென்றாலும் இருக்கிறதே! என்னென்பேன்! கிரிஸ்பினஸைப் போன்ற அதிர்ஷ்டசாலி உலகிலே வேறு யாரிருக்கமுடியும்? உன்னைப் போன்ற உல்லாசியை நாயகியாகக் கொண்டவனுக்கு ஈடு எதிர் உலகில் ஏது?" என்றெல்லாம் கூறுவான். "இந்த முத்துமாலை உனது மார்பில் புரண்டு பெருமை பெறட்டும். மறுக்காதே! மாதர் மணி பெற்றுக்கொள்" என்று கூறி, மாலையைப் பரிசளிப்பான். இந்த மதுரமான கனிகள் மிக்க சுவையுள்ளன. மெசபடோமியாவிலிருந்து தருவித்தேன். இவைகளைப் பெற்றுக் கொள், உன் மொழிக்கு ஈடான சுவையை இக்கனிரசம் எனக்குத் தரவில்லை" என்று கூறுவான்! புகழ்வது, பரிசுகள் தருவது, அடிக்கடி சந்திப்பது, அளவளாவுவது ஆகிய இவைகள் மூலம் ஆத்தோ பாப்பேயாவின் மனத்தை மெல்ல மெல்லக் கவர்ந்தான். எல்லோரும் விருந்துக்கு வந்திருந்தாலும், ஆத்தோ வரவில்லையானால், பாப்பேயாவின் முகம் மலராது! மாளிகையிலே எப்பக்கம் நோக்கினாலும், ஆத்தோ அன்போடு தந்த ஏதாவதொரு பரிசு அவள் கண்ணில்படும்! பொருள் இருக்கும் இடத்திலே அவனே நின்று புன்னகை புரிவதுபோல் அவளுக்குத் தோன்றும். "ஆஹா! அவனுக்குத்தான் என்னிடம் எவ்வளவு அன்பு! என்னை மனைவியாக்கிக் கொண்டவனுக்கு இந்த அக்கறை

இல்லையா!" பாப்பேயா எண்ணிக்கொள்வாள்.

அவனுடைய புகழுரையைக் கேட்டு பூரித்தபடி முகத்தை அவன் முகத்தை அவன் முகத்தருகே நிறுத்தி, "அன்புடையீர் ஆத்தோ! இவ்வளவு பிரியம் வைத்து, இவ்வளவு செய்கிறீரே என் பொருட்டு, என்னால் உமக்கு யாதொரு இலாபமும் இல்லையே என்றெண்ணியே ஏங்குகிறேன்", என்று பாப்பேயா கூறுவாள்.

"மனோஹரி! உன்னைக் காணவும், பேசவும், தோழமை கொள்ளவும் இடமிருக்கிற இந்த இன்பத்துக்கு நான் தந்த பரிசுகளும், என் நேசமும் ஏணி வைத்தாலும் எட்டாதே! வீரமிக்கவனை உலகம் போற்ற வில்லையா! அவன் நேரடியாக என்ன தருகிறான்; கவியைப் போற்றுகிறோம். கவிதையின் சுவையைப் பருகி, அதுபோல், ரோம் சாம்ராஜ்யத்துக்கே வைரமாக இருக்கும் உன்னைப் புகழ்வது எனக்கன்றோ இன்பம்! இந்த பேறு எனக்குக் கிடைக்கச் செய்தது ஒன்று போதாதா? எளியோனின் மனம் ஏதேதோ எண்ணுகிறது என் செய்வது" என்று தந்திரமாக ஆத்தோ பேசுவான்.

"என் உள்ளம் மட்டும் சும்மாவா இருக்கிறது! நான் தங்கக்கூட்டில் அடைபட்ட கிளிபோல் இருக்கிறேன். என் நிலையை நீ அறிவாயா, ஆத்தோ?" என்பாள் பாப்பேயா.

"செவி குளிர்ந்தது சிங்காரி! நெஞ்சில் நானிருந்தால் போதும்; நிலைமை மாற நெடுநாட்கள் பிடிக்காது" என்று முன்னேறுவான், மாதரை வசீகரிக்கும் வித்தையில் தேர்ந்தவன்.

"ரூபஸ் என்னை இழக்க ஒரு நாளும் இசையான். ஏதேனும் சந்தேகம் ஏற்பட்டால் என்னையும் சித்திரவதை செய்வான். தானும் தற்கொலை செய்துகொள்வான்! அவ்வளவு பாசம் வைத்திருக்கிறான் ரூபஸ். தர்மசங்கடமாகத்தானே இருக்கிறது" என்று பாப்பேயா கூறுவாள்.

"கோட்டைக்கு வெளியே உள்ள அகழியைக் கடந்து விட்டோம்; மதிற்சுவரைத்தாண்டி உள்ளே புகவேண்டியதுதான் பாக்கி" என்று தீர்மானிக்கும் தளபதிபோல், "பாப்பேயாவின் உள்ளத்தை உருக்கிவிட்டோம்; இனி, வேளையை வருவித்துக் கொள்வதுதான் பாக்கி" என்று ஆத்தோ தீர்மானித்துப் பூரித்தான்!

இத்தகைய சரசமாடுவது சில நாட்கள் நடைபெற்ற பிறகு பாப்பேயா ஆத்தோவைக் கல்யாணஞ் செய்து கொள்வது என்று தீர்மானித்துவிட்டாள், தித்திப்பான தீர்மானம் பிறந்ததும், ரூபஸ் வேம்பானான். பாப்பேயாவின் தீர்மானம் விரைவிலே செயலாகிவிட்டது. ஆத்தோவை அவள் மணம்செய்து கொண்டாள்.

இதற்குள் பாப்பேயாவின் புகழ் அரச மன்றத்துக்குச் சென்றது. அங்கு ஆக்டேயிடம் ஆடிப்பாடிக் கிடந்த நீரோவின் செவிகளில்

பாப்பேயாவின் சிங்காரச் சிரிப்பு புகுந்தது. "அப்படியா! அவ்வளவு அழகா?" என்று வியப்புடன் கேட்பான் மன்னன்! பாப்பேயாவின் அழகு, அரசனின் செவி புகுந்ததற்குக் காரணமே ஆத்தோதான்!

"மன்னரே! அந்த மனோகரியைக் காணாத கண்கள் வெறும் புண்கள்."

"போ! போ! புனைந்துரை பேசுகிறாய், அவள் என்ன அவ்வளவு அழகியா? ஆக்டேயிடம் அவள் என்ன செய்ய முடியும்?"

"அரசே! பாப்பேயாவைக் கண்டு பிறகு பேசும்!"

"தோழனே! நீ ஏதோ பிரமாதமாகப் பேசுகிறாய். உனது ஆசை உன் கண்களை மறைக்கிறது.

"நீரோ மன்னரே! உமது நேத்திரம் பெறவேண்டிய விருந்தை இன்னமும் பெறவில்லை."

"சரி அந்தப் பாப்பேயாவை நான் ஒருமுறை பார்க்கிறேன்"

இவ்விதமாக மன்னனும் ஆத்தோவும் பேசுவர். அரசன் அதிசயப்பட்டான்! தர்பாரிலே எவ்வளவோ சுந்தரிகள் வருகிறார்கள். போகிறார்கள். கீதமொழிக் கிளிகளும், அன்ன நடை அணங்குகளும், மின்னல் இடை மினுக்கிகளும் கொஞ்சுகின்றனர்; இவ்வளவு பேரையும் மூலையில் தள்ளிவிட்டு பாப்பேயாவைப் புகழ்கிறானே!" என்று அரசன் வியந்தான்.

கடைசியில் ஒரு நாள், மன்னன் மயிலாளைச் சந்தித்தான். கண்டதும் காதல் கொண்டான். அவனுடைய வழியில் தாவிக் குதித்து, நெஞ்சிலே நின்றுகொண்டு பாப்பேயா நர்த்தனம் புரிந்தாள். ஆக்டேயை மறந்தான்! அழகு சுந்தரிகளை வெறுத்தான்! மலரிருக்கப் புதரில் நடந்தோமே. மணியிருக்கப் பருக்கைக் கற்களைத் தேடினோமே. ஒளி இருக்க இருளில் புரண்டோமே. நீரிருக்கச் சேற்றில் நடந்தோமே. பாப்பேயா இந்த ரோம் நகரில் இருக்க ஏதேதோ பெண் உருவங் களுடன் வீண் காலம் போக்கினோமே என்று மன்னன் எண்ணி ஏங்கினான். மன்னனின் மனத்தை அவள் தெரிந்து கொண்டாள்! மனம் மகிழ்ந்தது! "மனமே பொறு! மாளிகையிலிருந்து அரண்மனை சீமானை விட்டுப் பிரிந்து மன்னனைச் சேரப் போகிறாய்; பதறிடாதே, அவசரப்படாதே!" என்று மனத்தைத் தேற்றிக்கொண்டு அச்சமும் நாணமும் அழகுற விளங்க நடித்தாள். மன்னனைக் கண்டாள் தலைகுனிவாள்! பேசும்போது குரல் கம்பிக் கொண்டிருக்கும்! பார்க்கும்போது பிரேமையும் பயமும் கலந்திருக்கும்! இஷ்டந்தான்! இயலுமா? - சம்மதந்தான் ஆனால் சரியாகுமோ? என்று அவளது கண்கள் மன்னனைக் கேட்கும்! "என் விருப்பத்தை தடை செய்யும் சக்தியும் சாம்ராஜ்யத்திலே இருக்கிறதோ?" என்று கேட்பான் மன்னன்.

காதல் நிராகரிக்கப்பட்டால், சோகமும் துக்கமும் பிறக்கும் காதல் கைகூட, அவளாலும் தடையில்லை! ஆனால் இடையேயுள்ள சில சங்கடங்களால் காதல் கைகூடப் போவதில்லை என்று தெரிந்தால், வேதனை தோன்றும்; காதல் கைகூடுமென்று கருதித் தூது விட்டோ, உரையாடியோ உதாசீனம் செய்யப்பட்டால் வெட்கம் தோன்றும். "எனக்கும் சம்மதந்தான், ஆனால் இது முறையாகுமோ? வெளியே தெரிந்தால் என்ன எண்ணுவார்கள்? மகா சந்தேகப் பேர்வழிகளால் சூழப்பட்டிருக்கிறேனே நான் இதற்கெப்படி இணங்குவது! என் நிலை தெரிந்தும், அவர் இதுபோல் கேட்கலாமோ?" என்று கூறிக்கேட்டால், ஏமாந்தால் வெட்கம்; கிடைக்கவில்லையே என்பதனால் சோகம்; குறுக்கே தடைகள் உள்ளனவாமே என்பதை எண்ணுவதால் வேதனை; இதற்காக எடுத்த முயற்சி வீணாயிற்றே என்பதை எண்ணுவதால் கோபம்; ஆக இவ்வளவும் உண்டாகுமன்றோ? மன்னன் நீரோவுக்கும் இதே நிலை! கோபமும், சோகமும், துக்கமும், வேதனையும் அவனைக் குடையலாயின! இவ்வளவுடன் இன்னொன்றும் சேர்ந்தது மன்னனுக்கு. அவன் உள்ளத்திலே எந்த அளவுக்குக் காதற்தீயை மூட்ட முடியுமோ அவ்வளவும் மூட்டிவிட வேண்டும் என்று தீர்மானித்த பாப்பேயா, "மன்னரே! தங்கள் இஷ்டத்தைப் பூர்த்தி செய்துதரும் நிலையிலே நான் இல்லை நெஞ்சம் சுடுகிறது! தாங்கள் மனவருத்தப்படாதீர்! இளமங்கை ஆக்டேவியா உமக்கு ஆனந்தமளிப்பாள்! அடிமை ஆக்டே உம்மை ஆருயிர் என மதிப்பாள். அவர்களிடை குலவி என்னை மறவுங்கள்" என்று கூறினாள்.

மன்னனால் இச் சொல்லம்பைத் தாங்க முடியவில்லை. தாளமில்லாத பாட்டு, தடாகமில்லாத ஊர், தயவில்லாத தையல் யாருக்குப் பிடிக்கும்! சாதாரண ஆசாமிகள் இந்நிலையில், "நாமென்ன செய்ய முடியும்! பாறைபோல் மனத்தைப் பண்படுத்தி வைத்துவிட்டாள். நாம் மோதிச் சிதறுவது தவிர வேறென்ன செய்வது?" என்று மன வேதனைப்படுவர், மன்னன் அங்ஙனமிருப்பானா! வெகுண்டான். "பிடி சாபம்" என்றான். ஆத்தோவை நோக்கி, "நாளை முதல் நீர் லுஸ்டியானா மண்டலத்துக் கவர்னர்! இது நமது கட்டளை. இன்றே நீர் புறப்படும்" என்று உரத்த குரலில் மன்னன் ஆத்தோவிடம் கூறிவிட்டு, மெல்லிய குரலில், "பாப்பேயா ரோம் நகரிலேயே இருக்கட்டும் இதுவும் நமது கட்டளை!" என்று கூறினான். ஆத்தோ துடித்தான், துயருற்றான்; பெருமூச் செறிந்தான். பொன் விலங்கு பூட்டிவிட்டான் நீரோ, பொற்கொடியைச் சூறையாடினான்; என்ன செய்வது என்று ஏங்கி லுஸ்டியானா போய்ச் சேர்ந்தான்! பாப்பேயா, மன்னனின் பஞ்சணை புகுந்தாள்! மன்னன் களிப்புக் கடலில் குளித்தான். பல நாட்கள் பாப்பேயா. மன்னனின்

"பிரதம பியாரி" யாகவே இருந்தாள்! மன்னனின் மனைவியாக ஆக்டேவியா இருந்தாள். பிறகு அந்தத் தடையும் நீங்கிற்று. விவாக விடுதலை, சிறைவாசம், மரண தண்டனை என்று மாசற்ற ஆக்டேவியாவுக்கு முடிவு ஏற்பட்டுவிட்டது. மூர்க்கத்தனமான மன்னனுடைய கட்டளையால், நீரோவின் அன்னை அக்ரிப்பானாவும் அழிக்கப்பட்டாள். பாப்பேயா பட்டமகிஷியானாள். அவளுக்கு எதிர்ப்பே இல்லை. மன்னன் அவள் மடிமீது கண்ட சுகம் மேதினியிலே வேறெங்குமில்லை என்றுதான் இருந்தான். பாப்பேயா பட்டத்தரசனின் சார்பில் கட்டளைகள் பிறப்பித்துக் கொண்டு வாழ்ந்து வந்தாள். காமச் சேட்டைகளுடன் மன்னன் நீரோவுக்குத் தேரோட்டுதல், தெருவில் நின்று பாடுதல், கூத்தாடுதல் ஆகியவற்றிலேயே விருப்பம். மன்னன் இவை செய்தால் மகாராணிக்குப் பிடிக்கவில்லை. பன்முறை கூறியும் அவன் கேட்கவில்லை. இதனால் விளைந்த சிறு சச்சரவின்போது, நீரோ பாப்பேயாவை வயிற்றிலே உதைக்க, அவள் திடீரென மாண்டாள். கொதித்த கோபம் பரிமளவல்லியைப் பிணமாக்கியது. கண்ட மன்னனின் மனம் கொப்பளித்தது. தன் செயலை எண்ணிப் புலம்பினான். அவளைத் தன் கண்ணீரால் கழுவினான்! "ஆருயிரே அன்பே! அநியாயமாக உன்னைக் கொன்றேனே" என்றாலும் தான். பிணமாகக் கிடந்தவள் பேசவா போகிறாள்! ரோம் சாம்ராஜ்யத்தைச் சிறைப்பிடித்த சிங்காரவல்லியும் சவக்குழியில் சேர்க்கப்பட்டாள்.



# ஐந்து நாயகர் அவளுக்கு

**ஆ** டல் பாடல் ஒரு பக்கம்! சிரிப்பும் சரசமும் மற்றோர் பக்கம்! மதிமுக மாதரின் மதுரமொழிகளும் கனிரசமும் கலந்துண்டு போதையேறியோர் பிரிதோர் பக்கம்! "புதிய மது கிடைத்தது' என்று பூரித்து, இடையழகையும், கடைக் கண்ணழகையும் எண்ணியெண்ணி உளம் மகிழும் உல்லாசர்கள் ஒரு புறம்- நீரோ மன்னனின் விருந்து மண்டபம், கோலாகலக் காட்சியாக இருந்தது. மமதை மிகுந்த மன்னன், மாதாவைக் கொன்றவன். முதல் மனைவியைக் கொன்றவன். இரண்டாம் மனைவியைக் கொன்றவன். அவன் செய்யாத அக்ரமம் கிடையாது. அவனுடைய தீயபார்வை தீண்டப்பெறதா திருமதிகளின் தொகை சொற்பம்! அவனுடைய கள்ள உள்ளத்தால் பலியான குடிகள் பல! எனினும் அவன் மன்னன்! மக்களின் தலைவன்! கோல் கொண்டவன். எனவே அவனிடம் எத்தகைய கெட்ட நடத்தை இருப்பினும், நெஞ்சில் எண்ணி, கண்ணீர் சிந்த முடியுமேயொழிய எதிர்க்க மக்களால் முடியுமா? இது நீரோவின் நம்பிக்கை! ரோம் சாம்ராஜ்யம், ஒரு ஜூலியஸ் சீசரின் ஆணவத்தையே சகிக்கமுடியாமல், சதியில் இறங்கியதை நீரோ மறந்தான். முடிதரித்த தனக்கு எவரும் பிடியில் அடங்கிவிடுவார் என்று எண்ணினான். முகஸ்துதி செய்யப் பலர் இருந்தனர்! சேவகம் புரியச் சீமான்கள் காத்துக்கிடந்தனர். சேடியர் மூலம் விரகதாபத்தைப் பற்றிக் கூறியனுப்பிய சிங்காரிகளுக்குக் குறைவில்லை! ஆனந்தத்தின் எல்லையை அடைந்தான் நீரோ! அகந்தையும் அவனும் அளவளாவி வாழ்ந்தனர்! பாவம்! அவன் அறியான், தன்னைத் தூக்கியெறியும் புரட்சிப் புயல் கிளம்பி விட்டது என்பதை, விருந்து மண்டபத்திலே, வேடிக்கைப் பேச்சிலே, வினோதக் காட்சியிலே, வேல் விழியர் புடைசூழ வீற்றிருந்த மன்னனை நோக்கி ஓடோடி வந்த வேலையாள் ஓலையொன்று தந்தான். படித்தான் மன்னன் பதறினான்! விருந்து மண்டபம் நிசப்தமாகி விட்டது. கீதம் நின்றது; கிண்கிணி அசையவில்லை, மன்னனின் கண்களிலே மிரட்சி தோன்றிவிட்டது. கைவிரல்கள் ஆடின. கடிதத்தைக் கிழித்து எறிந்தான் மேஜை மீதிருந்த பாத்திரங்களை வாரி வீசினான், பித்தங்கொண்டவன் போல் பிதற்றினான். "பேராபத்து! என் உயிருக்கே உலை வைத்துவிட்டார்கள்! என் இன்ப வாழ்வுக்கு இறுதி நாள் வந்துவிடும் போலிருக்கிறது. என் செய்வேன்! எப்படிப் பிரிவேன் இந்த போகத்தை! எவர் துணிபுரிவர் இந்த நேரத்தில்?" என்று கதறினான் மன்னன். களித்துக் கிடக்கக்கூடியவர்கள் கலங்கி நின்றனர். காரணம் என்னவென்று உசாவினர்.

"கால்பா புரட்சிக் கொடியைப் பறக்கவிட்டு விட்டான், படைகளுடன் வருகிறான் ரோம் நகருக்கு! லூஸ்டியானா கவர்னர் ஆத்தோ அவனுக்கு உடந்தையாக இருக்கிறான், என் முடியைப் பறிக்க வருகிறான். "கால்பா" என்று கூவினான் நீரோ.

கால்பா ரோம் ராஜ்யச் சேனைகளின் அதிபன் ஸ்பெயினில் வாழ்ந்து வந்தான். நீரோவின் ஆட்சியின் அலங்கோலமும் அதனால் மக்கள் கொண்ட மனக்கொதிப்பும் தெரிந்ததும் "மக்களை மதியா மன்னனை நானும் மதியேன், அவனை முறியடித்து மக்களின் துயர் தீர்ப்பேன்" என்று கூறிக்கொண்டு ரோம் நகரை நோக்கிப் படைகளுடன் புறப்பட்டான். இந்த செய்தி கேட்ட நீரோ, சிந்தையில் திகில் கொண்டு திகைத்தான். நீலநிற வானிலே அரசிளங்குமரிபோல் நிலவும் அரசிளங்குமரியின் பணிப்பெண் பரிவாரம்போல் நட்சத்திரங்களும், பிரகாசிக்கின்றன! தென்றல் வீசுகிறது.

அலங்கரிக்கப்பட்ட தோணியிலே, இளமங்கையின் இசையைக் கேட்டு இன்புற்று மலர் தூவிய பஞ்சணைமீது சாய்ந்துகொண்டு இருக்கிறான் சீமான், திடீரென ஓர் பெருங்காற்று! நீலவானம் கருத்து விடுகிறது. நிலவும் நட்சத்திரங்களும் பதுங்கிக்கொண்டன. இடியும், மின்னலும் சுழலும் காற்றுமாக, சூறாவளி ஆரம்பமாகிறது. தோணியின் கதி யாதாகும்? அதிலே உள்ள தோகையர் கதி என்ன? அவர்களின் துறையின் கதி என்ன? உல்லாசம் ஒரு வினாடியிலே ஓடிவிடும். அல்லோல கல்லோலம்; கீதம் போகும். அழுகுரல் எழும்; ஜீவன் பிரியும், சவத்தைச் சுறா முத்தமிடும்; சுழல் இழுத்துச்செல்லும்; தோணியைச் சூறாவளி தூளாக்கித் தூக்கி வீசும் நாற்புறமும்.

மக்களின் க்ஷேமத்தைப்பற்றி மனதில் எண்ணாது மமதையோடு கொடுங்கோலாட்சி செய்யும் அரசன், தோணியில் செல்லும் சீமான் சூறாவளியால் நாசமாவதுபோல் மக்களின் புரட்சியாலோ அரச அவையினரின் சதியாலோ, சாய்வான்; இது சரிதம்; ஆள்வோருக்கு எடுத்துக்காட்டும் எச்சரிக்கை! நீரோ மன்னன் இதனைக் கவனித் தானில்லை. கொடுங்கோலாட்சி புரிந்தான். ரோம் தீப்பற்றி எரியினும் வீணா நாதத்தை விட்டானில்லை. போகத்தில் புரண்டான். புல்லருடன் வாழ்ந்தான். அடக்கமுள்ள ஆக்டேவியாவைக் கொன்றான்; பாப்பேயாவின் பாதத்தைப் பூஜித்தான். பின்னர் அவளையும் கொன்றான். இரு மனைவியரும் இறந்துவிட்டனர். கற்பும் மானமும் இறந்துபட்ட கன்னிகையருடன் கூடிக் காலங்கழித்து வந்தான். ஆனால் ராஜாவுக்கோர் ராணி வேண்டாமோ! மூன்றாம் மனைவியைக் கொண்டான். அவள் பெயர் மெசாலினா! முன்னாளில் இருந்த

மெசாலினாவல்ல. ஆனால் அதே பரம்பரை! நீரோவுக்கு இவள் மூன்றாம் மனைவி; இவளுக்கோ, நீரோ ஐந்தாம் புருடன்! நாலு பேருக்கு நாயகியாகி இருந்து பெற்ற அனுபவமும், இயற்கையாகவே அவளுக்கு அமைந்திருந்த அழகும், குறும்புத்தனமான பேச்சும், கொற்றவனை அவளிடம் குலவ வைத்தது. கோமான் அவளிடம் கொஞ்சிக்கொண்டிருந்தபோது, அவள் மூன்றாம் புருடன் இறந்து போக... நாலாம் புருடனாக ஒருவனை நாடியிருந்த நேரம். மூன்று முறை பார்த்த "மனைவி உத்தியோகம்" அவளுக்கு மந்தகாசத்தையும் ஆடவரை மயக்கும் வித்தையையும் பெருஞ் செல்வத்தையும் தந்தது. ஓய்வு நாட்களிலே அரசனின் சரசம் கிடைத்தது! இந்த மெசாலினாவுக்கு அரசனைப் போன்ற வேறு பலரும் அன்பர்களாக இருந்தனர்.

சிங்காரச் சோலை வழியே பலரும் சென்று களிப்புறுவதுபோல் மெசாலினாவின் வாழ்க்கை பலருக்குச் சோலையாக இருந்தது. ஆனால் அங்கு வீசிய விஷவாயுவால், முதல் மூன்று புருடர்களும் பாழாயினர். நாலாவதாக நீரோ மன்னனின் நேசன் வெஸ்டினஸ் அவளுக்குக் கணவனானான். தான் கொஞ்சிக் குலாவிக் கொண்டுவந்த குளிர் நிழலை வேறொருவன் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டது கண்ட நீரோ நெஞ்சம் துடித்து நின்றான். "மன்னனின் மனதுக்கிசைந்தவளை மாலையிடவும் துணிவு பிறந்ததோ மடையனுக்கு எனக்காக இருந்த கனியை, எவனோ ஒருவன் சுவைப்பதா ஏற்குமா?" என்று நீரோ கோபித்தான். அந்தக் கோபம் வெஸ்டினசை மாய்க்கும் கூர்வாளாயிற்று. மன்னனின் ஏவலர் வெஸ்டினசை அவனுடைய மாளிகையிலேயே கொதிக்கும் நீரில் குளிப்பாட்டி சாகடித்தனர். மொசலினாவுக்கு இது தெரியும்; ஆனால் அவள் இதற்கு அஞ்சுபவளா! மூன்று முறை கணவனை இழந்து பெற்ற அநுபவம் அவளுக்கில்லையா! நாலாம் பேர்வழி போனாலென்ன! ஐந்தாம் புருடனுக்கு ஏற்கெனவே "அச்சாரம் வாங்கி விட்டோமே என்று எண்ணினாள். அதிலும் வெஸ்டினசை மன்னன் கொன்றுவிட்டது தன்னைப் பெறுவதற்கே என்பது தெரிந்ததும் தனது பாதையில் இருந்த ஓர் பள்ளத்தை தாண்டிவிட்டதாக மெசாலினா கருதினாலோயொழிய பார்த்தா இறந்துவிட்டார் என்று பதறவில்லை. அவள் எதிர் பார்த்தபடியே நீரோ அவளை மனைவியாக்கிக் கொண்டான். ஐந்தாம் புருடன் ரோம் சாம்ராஜ்யாதிபதியாகக் கிடைத்தது கண்டு முதல் நால்வர் பிரிந்தது, இந்த முதன்மை ஸ்தானம் தனக்குக் கிடைக்கவே போலும் என்று எண்ணி, போனவர்களைப் பற்றி எண்ணிப் புலம்பாது, இருக்கும் இன்பவல்லியானாள்.

மூன்றாம் மனைவியுடன் நீரோ வாழ்ந்து வந்த நாட்களிலேதான்

அவனுக்கு முடிவு காலமும் பிறந்தது.

கால்பாவும், ஆத்தோவும் புரட்சி செய்யவே மனம் புழுங்கி வதைந்து வந்த மக்கள், அவ்விருவரையும் ரோம் ராஜ்யரட்சகர்கள் என்று போற்றினர். செனட் மன்னன்மீது சீறிற்று, சீமான்கள் அவனைவிட்டுப் பிரிந்தனர். நண்பர்கள் ஒளிந்துகொண்டனர். நாயகிகள் நந்தவனத்திலே நாகம் புகுந்தால் ஓடிடும் நங்கையர்போல் மன்னனின் மாளிகையை விட்டு ஓடினர். மருண்ட மன்னனைத் தேற்றுவார் இல்லை. இன்னது செய்வதென்று தெரியாது தவித்தான் நீரோ. அவனுடைய கொடுமைக்குப் பலியானவர்கள் கொதித்தது பற்றி அவன் முன்னம் அறியான். அன்று புரட்சி அவனிடம் வஞ்சம் தீர்த்துக்கொண்டது. விஷந்தின்று இறப்பதா? ஆற்றில் விழுந்து மடிவதா? மக்களிடம் மண்டியிட்டு மன்னிப்புக் கோருவதா? புரட்சித் தலைவர்களின் பாதத்தைப் பிடித்துகொண்டு உயிர்ப்பிச்சை கேட்பதா என்று பலப்பல எண்ணினான். கையிலே ஒரு தங்கப்பேழை! அதிலே கடும் விஷம்! இதை வைத்துக்கொண்டு நந்தவனத்திலே உலவினான் நஞ்சு தின்ன மனம் துணியவில்லை. கடைசியில் ஊருக்கு வெளியே உள்ள தனது வேலைக்காரனொருவனின் விடுதிக்கு விரைந்தோடினான். விம்மி விம்மி அழுதான்! தற்கொலை செய்து கொள்ளத் தீர்மானித்தான்! நீரோவின் எதிரிலேயே அவனுக்கோர் சவக்குழி வெட்டப்பட்டது. சிங்காதனத்திலே வீற்றிருந்து, வெளிநாட்டு வேந்தர்கள் தரும் கப்பத்தைக் கண்டு பூரித்து பிரதானியர் பேசிடும் புகழுரை கேட்டு மகிழ்ந்த நீரோ, வேலையாட்கள் கூரிய கட்டாரியைக் கொடுத்து, "கொற்றவனே! கொலைக்களத்திலே மாள்வதைவிட இது கொடிதல்ல" என்று கூறவும், எதிரே சவக்குழி தயாராக இருக்கவும் கண்டு, மனம் துடிதுடித்தான், கட்டாரியும் அவன் கையில் நடுங்கியது. குத்திக் கொண்டான்; ஆழமாகப் பாயவில்லை. உடனிருந்த வேலையாள் அந்த உதவியைச் செய்தான். கட்டாரி மன்னனைச் சாகடித்தது.

நீரோவை ஐந்தாம் புருடனாகப் பெற்ற மெசாலினா மன்னன் பிணமான பிறகு என்ன செய்தாள்? ஆறாம் புருடனாக ஆத்தோவை மணக்க ஆடையணி பூண்டாள். ஆனால் அவள் எண்ணம் ஈடேறவில்லை. ஆத்தோவே தற்கொலை செய்துகொள்ளும்படி நேரிட்டது. ஆறாம் புருடன் கிடைக்காதது மெசாலினாவுக்கு மனவாட்டத்தைத் தந்ததேயொழிய நீரோவின் கதி அவளை கலங்கவைக்கவில்லை. சின்னாள் வாழ்ந்து, பிறகு மெசாலினாவும் மண்ணுடன் சேர்ந்தாள்.



# மாவீரன் மனைவி

மா வீரன் மனைவி! மரக்கட்டையால் செய்த பொம்மை அவள், சிங்காதனமேறிட உரிமை கொண்டவள்! உரிமை இருக்கிறது. பயன் என்ன? அநுபவிக்கத் தெரியாத அசடு.

மாதவம் புரிவோரையும் மயக்கிடும் மனோஹரமான மலர்ச்சோலைகள் அவள் அரண்மனையை அடுத்துள்ளன.

உண்மை! அங்கு, மயிலும் குயிலும் நடமாடுகின்றன. வண்டு மலரைத் தழுவி மது உண்டு பாடுகிறது. அவள் உளவினதில்லை அங்கே.

தங்கக் குவியல் தகதகவென ஜொலிக்கிறது அரண்மனைப் பொக்கிஷத்திலே! உண்மைதான்! ஆனால் அவள் அதனைத் தாண்டி நடக்கிறாளே யொழிய, தொட்டும் பார்க்கவில்லை.

சிங்காரச் சிற்றாறு சிந்து பாடுகிறது, ஆமாம்! அவள் செவிக்கு அது விருந்தாவதில்லை. அவள் ஓர் குருடி! கண் இருந்து பயன் என்ன? கருத்தற்றவள். காவலனின் கட்டழகியானாள். காரியத்திலே பூஜ்யமாக இருக்கிறாள், சுந்தரமான உருவம் பெற்றிருக்கிறாள்; சத்தற்றவளாகவே வாழ்கிறாள். அவளுக்குக்கிடைத்துள்ள இடமும், நிலையும் வேறு யாருக்குக்கிடைத்தாலும், இப்படியா இருப்பாள்? ரோம் நாடு கிடுகிடுவென ஆடாதா! அதிகாரத்தால் அபிஷேகிக்கப்பட்டு, அரசர்களால் பூசிக்கப்பட்டு, மந்திரிகள் சாமரம் வீச, மாவீரர்கள் கட்டியங்கூற, சீமான்கள் சிந்துபாட சீமாட்டிகள் நாட்டியமாட, பவனி வருவாள்!

ரோம் நாட்டு ராணியாக வாழ வழி இருக்கிறது. வகை தெரியாது கிடக்கிறாள் இந்த வனிதை, மாவீரனின் மனைவியாக என்ன சுகம் கண்டாள்? இதற்கு முன்பு, ரோம் நாட்டு ராணியாக இருந்தவர்கள் கண்ட ரசத்திலே, ஆயிரத்திலோர் பாகம் இவள் கண்டதுண்டா? தன்னிடம் மலரும் மலர் தனக்குப் பயன்படாதபடியான செடி கொடிபோல் இவளுக்குக் கிடைக்கும் அதிகாரமும் அந்தஸ்தும் இவளுக்குப் பயன்படுவதில்லை. லெபிடா ராணி என்று பட்டம் பெற்று இருக்கிறாளே யொழிய அநுபவித்ததென்ன?

ரோம் நாட்டு ரசவள்ளிகள் இங்ஙனம் பேசிக்கொண்டனர். லெபிடாவைப் பற்றி, லெபிடா லலிதமானவள்! ஆனால் போகத்தில் அவள் லயிக்கவில்லை. சேற்றிலோர் செந்தாமரைபோல், காமக்கூத்தர்கள் வாழ்ந்த நாட்டிலே லெபிடா இருந்தாள். அதிகாரத்தால்

அவள் ஆணவம் கொண்டாளில்லை. அந்தஸ்து அவளுக்கு அகந்தையைத் தரவில்லை. அரசி என்ற நிலை அவளுக்கு அற்ப புத்தியையோ, பேராசையையோ தரவில்லை. தாமரை இலையில் தண்ணீர் பட்டும் படாததுபோல் இருக்குமாம். லெபிடாவும் அங்ஙனமே வாழ்ந்து வந்தாள். கோலாகலமாக லீலா விநோதமாக வாழ்ந்து வந்த ராணிகள் மிகுந்த ரோம் சாம்ராஜ்யத்தில், லெபிடா நற்குணத்தையே அணியாகவும், அடக்கத்தையே அழகாகவும், கணவனிடம் அன்பையே பரிமளமாகவும் கொண்டு வீண் ஆடம்பரத்தில் விருப்பமின்றி அதிகாரத்துக்காகச் சதி செய்யும் அகந்தையின்றி வாழ்ந்து வந்தாள். இது அதிசயிக்கத்தக்கதே. ஆடம்பரக்காரிகளும் ஆணழகரை அடிமை கொண்டவர்களும், முடிமன்னரை பெற மோகனாஸ்திரம் ஏவியிருப்பவர்களும், தர்பாரில் இடம்பெறத் தூதுவிட்ட தளுக்குக்காரிகளும், உடலை அடகுவைத்து ஊராளும் உரிமையை உறிஞ்சியவர்களும், கொண்டவனுக்கு விஷமிட்டுக் கோல் கொண்டவர்களும், அதிகார வெறியால் ஆபாச ஆட்டமாடியவர்களும் நிறைந்த காமவேள் நடனசாலையில் அடக்கமும், அன்பும், பெருந்தன்மையும், பெண்மையும் பொலிவுற ஒரு லெபிடா தோன்றியது மகிழ்ச்சி தருவது மட்டுமல்ல; ஆச்சரிய சம்பவமுங்கூட! கண்ணால் அழைத்தால் வராதவரைக் கைப் பிடித்திழுக்கும் அளவு காமவெறி கொண்டு வாழ்ந்த மெசாலினா, சுந்தர புருடர்கள் இருக்கும்வரை சுகானுபவத்தை தேடுவதைத் தவிர சுந்தராங்கிகளுக்கு வேறு இலட்சியம் எது என்று கருதிய ஜூலியா, அதிகாரத்துக்காக எவனையும் பஞ்சணைக்கிழுக்கும் பாதகத்தைப் பக்குவமாகச் செய்த அக்ரிப்பானா முதலியோர் உதித்த ரோம் நகரில் கணவன் மன்னனானதும், கரை கொண்ட நெஞ்சுடன் அவனைச் சிறை கொண்டு, அதிகாரம் செலுத்தும் சதி எண்ணம் கொள்ளாமல் வாழ்ந்து வந்த லெபிடா, இத்தகைய இயல்புள்ள இன்னிசையை, கால்பா படைத் தலைவனாக இருந்தபோது, ரோம் நாட்டு அதிபனானபோதும் உள்ளன்போடு நேசித்து அவளுக்குத் துரோகம் செய்ய மறுத்து, காமச் சேற்றில் புரளாது இருந்தான். லெபிடாவின் அடக்கமும், அவளது கணவன் கால்பாவின் கட்டுக் கடங்கிய கருத்தும் ரோம் நாட்டு உல்லாச உலகில், ஆச்சரியத்தைக் கிளப்பிவிட்டது. இவர்கள் அபூர்வமான பிறவிகள், அநுபவிக்கத் தெரியாதவர்கள் என்று ரோம் ராஜ்ய உல்லாசர்கள் எண்ணிப் பரிதாபப்பட்டனர்.

கால்பா லெபிடாவைக் கல்யாணம் செய்து கொண்டது முதல், அவள் கல்லறை புகும் வரையில் அவளின்றி வேறோர் களிப்புக் கருவியைக் கண்டதில்லை, கொண்டதில்லை. அவள் இறந்த பிறகும் அவளை

எண்ணி ஏங்கினான். பிறரின் பிடியிடை, அன்னநடை, கிளிமொழி, பொன்மேனி, கார்நிறக் கூந்தல், கச்சடங்காத தனம், கண்களின் கனிவு, இதழின் துடிப்பு, கன்னங்களின் பளபளப்பு, கட்டமைந்த உடலின் கவர்ச்சி, தூது, துதி எதையும் பொருட் படுத்தவில்லை. லெபிடா இறந்தாள்; என் மனைவி வாழ்வும் இறந்தது என்று தீர்மானித்துவிட்டான். ரோம் ராஜ்யம் இதுபோன்ற சம்பவத்தை அடிக்கடி காண்பதில்லை. மனைவி, காதலி, காமவல்லி, கள்ளக் கன்னிகை, திடீர்தையல் என்று விதவிதமான வனிதையருடன் ஆடிடும் அரசர்களைக் கண்டிருக்கிறதேயொழிய இத்தகைய காதல் வாழ்க்கையை நடத்திய காவலனைக் கண்டதில்லை.

கால்பா படைத் தலைவனாக இருந்து, ஸ்பெயின் நாட்டில் வசித்து வந்தபோதுதான், ரோமில் நீரோ கொடுங்கோலாட்சி புரிந்து, கோணல் கூத்தாடிக் கொண்டிருந்தான்.

கால்பா புரட்சிக் கொடியைத் தூக்கினான்; நீரோ நெஞ்சிலே கட்டாரி நுழைந்தது; சவக்குழியில் அவன் புகுந்தான்.

கால்பா ரோம் மன்னனானான். தனது நற்குணத்தாலும் நற்செய்கையாலும் மக்களின் மனத்தை முதலில் மகிழ்வித்தான். ஆனால் அதிகார போதை பிறகு அவனைக் கெடுத்தது. அவன் கோல் கிடைத்தது மக்களை அடக்கியாளவே என்று கருதினான்; கொடுமை புரிந்தான். நீரோ நாசமாவதற்குக் காரணம், நீரோவுக்கு எதிரிடையாகப் புரட்சிப் பொறிகள் கிளம்பியதற்குக் காரணம் கொடுங்கோலாட்சி என்பதையும் மறந்து நீரோவின் நோயைக் கால்பா தனக்கும் வருவித்துக் கொண்டான். நோய் கொண்ட நீரோவின் நிலைமை கால்பாவுக்கும் வந்தது.

"நீரோ கொடியோன்! அவனாட்சியைத் தொலைமின்" என்று கால்பா முழக்கம் செய்தே மக்களைப் படை திரட்டினான். முன்னம் கால்பா கொடுமை புரியத் தொடங்கியதும், "கால்பா ஒழிக" என்ற கூச்சல் ரோம் சாம்ராஜ்யத்தில் சுலபத்தில் பரவிவிட்டது. நீரோவைக் கவிழ்க்க கால்பா கிளம்பினான்; அதுபோலவே கால்பாவைக் கவிழ்க்க ஆத்தோ கிளம்பினான். அவனுடைய படைகளுக்கு ஆதரவு பெருகிற்று. மக்கள் கால்பாவைத் தொலைத்துவிடத் தீர்மானித்தனர். மக்களின் ஆதரவை இழந்து உள்நாட்டிலே எதிர்ப்பைப் பெற்றுவிட்டதால், கால்பாவுக்கு அவனுடைய படைகளிலேயே ஆதரவு புகைந்து விட்டது. படை வீரரின் சிலர் கால்பாவைக் குத்திக் கொன்று விட்டனர். குன்றின் உச்சியில் ஏறி நின்று கீழே இருக்கும் பொருள்களை ஆணவத்தோடு

பார்த்துக்கொண்டிருக்கையிலேயே, காலிடறிக் கீழே உருண்டவன்போல், அரச பீடத்திலமர்ந்து, ஆணவத்தைத் தோழனாகவும் மமதையை மந்திரியாகவும் கொண்டதால் கால்பா தலைமீதிருந்த முடியை இழந்ததோடு, தலையையே இழந்தான்.

லெபிடாவைப் பெற்ற பிறகு, வேறோர் மாதரின் நேசத்தையும் வேண்டேன் என்று வெறுத்தொதுக்கிய மனஉறுதியும், நற்குணமும் கால்பா மன்னனானதும் அவவைவிட்டகன்றது. லெபிடாவும் இறந்துவிட்டாள். எனவே கால்பா மமதையுடன் நேசங்கொண்டான்; மண்டலத்தை இழந்தான்; உயிரையும் இழந்தான்.

லெபிடாவுடன் இன்புற்றிருந்த நாட்களிலே, வெறும் படைத் தலைவனாக மட்டும் இருந்த காலத்திலே, கால்பாமீது கணைகளைத் தொடுத்த காரிகையர் பலர்; கலங்கவில்லை கால்பா! அக்ரிப்பானாவின் அஸ்திரங்கூட, கூர்மழுங்கிக் கீழே விழுந்ததேயன்றி, கால்பாவின் மனத்தைத் துளைக்க முடியவில்லை. அத்தகைய கால்பா அதிகாரமெனும் அஸ்திரத்தால் தாக்கப்பட்டு அழிந்தான். தனது கணவனின் அன்பைவிட ரோம் சாம்ராஜ்யத்திலே மட்டுமல்ல, உலகிலேயே வேறோர் உயர்ந்த பொருள் இருக்கமுடியாது என்றுணர்ந்து வாழ்ந்து வந்த லெபிடா, தனது கணவனின் நிலையும் நினைப்பும் கெட்டு, அவனுடைய உயிரைச் சுட்டுக் கருக்க ஊரில் எதிர்ப்புத் தோன்றியதைக் காணவில்லை. லெபிடா அதற்கு முன்பே இறந்துவிட்டாள்.



# மன உருக்கிகள்

"து ள்ளுமதவேல் கைக் கனையாலே

தொல்லை நெடுநீலக் கடாலே

மெள்ளவரு சோலைக் குயிலாலே

மெய்யுருகு மானைத் தழுவாயே"

ரோம் ராஜ்யத்து ஆடவரும் பெண்டிரும் அடிக்கடி அக் கருத்துள்ள கீதத்தையே கேட்பர்; இன்புறுவர்! காமக்கணைகள், நீலக்கடல், நிலவு, சோலைக் குயில் இவைகள் ரோம் சாம்ராஜ்ய ரசானுபாவர்களைத் தாக்கித் தகர்ந்தன. இந்தத் தாக்குதலைக் கண்டவர், தழுவியும் தழதழத்த குரலிற் பேசியும், தாபத்தைத் தணித்துக்கொள்ளத் தடாகத்தின் மருங்கு தேடிச் சென்றோ; தணலை வீசும் சூரியன் சாய்ந்ததும், சாலை ஓரத்தில் சந்தித்தோ தமது துயர் களைய முனைவர், எதிரியின் பிடரியைப் போர்க்களத்தில் பிடித்திழுத்த வீரர்களின் கரங்கள், அழகிய மங்கையரின் மலரடி தடவும், எதிர்த்துவரும் கரியின் துதிக்கையைப் பற்றி இழுத்த கரங்கள் குறிப்பறிய வேண்டி கோதையரின் கூந்தலைக் கோதும்! போர்க் களத்திலே வாள் வேல் கொண்டு மாற்றானின் மார்பிலும் முதுகிலும் வடுக்களை உண்டாக்கிய மாவீரர்கள், போகக் களத்திலே புன்சிரிப்புக் காரிகளின் உடலெங்கும் நகக்குறிகள் பொறித்து நகைப்பர்! உல்லாசிகளின் உதடு, செங்கரும்பு அவர்களுக்கு! "மயிலே! மாடப் புறாவே! மலர் சோலைக்குயிலே! மதுரமொழிக் கிளியே!" என்று கூறுவர். உள்ளமும் உடலும் உரச உரச உச்சி முதல் உள்ளங்கால் வரைப் புளகாங்கிதமுற்று, பரிமளப் பஞ்சணையில், குமு குமு குமு வெனக் குரலொலிக்கத் தகதகவெனப் பணி ஜொலிக்க. கிலுகிலு வென வளை ஒளிக்க, விடுவிடு என்றுரைத்து அவள் சிரிக்க, இருஇருவென்று இவன் இயம்ப, கோலாகலக் காட்சியாக இருந்தது. ரோம் நாட்டு அரண்மனையிலும், மாளிகையிலும் இத்தகைய காமக் கூத்தர்கள் வாழ்ந்த நாட்களிலே அதிகாரத்துக்காக சதிகள் நடப்பதும், குட்டிக் கலகங்கள் எழுவதும், குடும்ப மணிகள் கொள்ளை போவதும் சகஜமாக இருந்தன. "அதிகாரம் கிடைத்ததும் அவனைச் சுகபோகச் சீட்டெனக் கொண்டு ஆடினவரிற் சிலர் பிறகு அவதியுற்ற துண்டு, அலங்காரம் நஞ்சானது முண்டு, மலர்கண்டு வண்டு மொய்க்க, அது கண்டு "தோழி, வண்டினை விரட்டு" என்று சீமாட்டி கூற, கூந்தலின் கருநிறத்தோடு வண்டின் நிறமும் கலந்துபோனதால், வண்டினைக் காணாது தோழி வாட, சிரிக்கும் சிங்காரி மயிலென நடக்க, இடை

படும்பாடு எவ்வளவு காணாய். நண்பா!" என்று நண்பரிருவரிற் ஒருவர் மற்றவர்க்குக் கூற. "அந்தத் துணைக் கனியின் கனத்தைத் தாங்க மாட்டாது துவளுகிறது" என்று அவன் பதில் கூற, தனது எழில் கண்டு பேசும் இளங்கோமான்கள் யாவர் என்று கூரிய கண்களை அவள் ஏவ, அந்தப் பார்வை ஈட்டி முனை பாய இடந்தராத மார்பையும் துளைத்திட "அழைப்பது எங்ஙனம் இந்தப் போரிலே?" என்று வீரர்கள் வியர்க்க, "வீழ்ந்தனர் இருவர்" என்றெண்ணி சீமாட்டி சிரிக்க. சித்தம் அனலிடை மெழுகென உருகி நின்று, சிவந்த வாயினை எண்ணியும், சிந்தும் தேனை எண்ணியும் இளங்கோமான்கள் ஏங்குவர். இரவில் தூங்கார். எத்தொழில் புகினும் பார்த்தவிடமெங்கும் அந்தப் பாவையின் முகமே தோன்றுதே என்று அயர்வர்! ஒரு பார்வை, ஒரு புன்சிரிப்பு, இடை, நடை இவை இவ்வளவு வெற்றிகளை நொடியிலே பெற்றுவிடுகின்றன. மனத்திலே வெப்பம் எழ, அதற்கு மனத்தை மயக்கிய மாதரின் மொழியெனும் இளநீர் பருகிட, இளங்கோ எண்ணுவான்.

"தோட்டத்து வாசல் திறந்திருக்குமே, காவலும் கட்டும் மிகுதியோ, மதிலும் வேலியும் இடப்பட்ட இடமோ" என்று எண்ணி ஏங்குவான். அவளருகே சென்றமர்ந்தாலின்றி விடாய் தீராது இந்நிலையில் வீரன் வளையவும் வணங்கவும்கூடத் தயாராகிவிடுகிறான்! ரோம் நாட்டு "மன உருக்கிகள்" இத்தகைய சந்தர்ப்பம் ஏற்பட்டால், தம்மைப் பொன் காய்க்கும் பூங்கொடியாக்கிக் கொள்ளவும், தம் புதல்வர் சீமான் களாகவும், வேந்தர்களாகவும் விளங்கவும் வழி செய்து கொள்வர். கொலுமண்டபத்திலே பல நூல் வல்லோர் கூறுவதோ, மதியூக மந்திரிகள் சொல்வதோ ஏற்றுக்கொள்ள விரும்பாத மன்னனும், கெண்டை விழி மாதரின் கேளிக்கைக் கூட்டத்திலே இதமொடு அவள் "இதை இங்ஙனம் செய்" என்றுரைத்தால், "இன்றே செய்வேன் இன்னுயிரே!" என்றுரைப்பர். அவ்வளவு கவர்ச்சிக்காரிகள் உலவினர் ரோம் சாம்ராஜ்யத்தில், ஆனால் சிற்சில குணவசதிகள் "அதிகாரமும், அது தரும் ஆனந்த வாழ்வும் ஆபத்தான ஓர் வலை; அதிலே வீழ்ந்தோர் வேதனையே அடைவர். சறுக்கு நிலம், எரிமலை, படுகுழி இவைகளுக்குச் சமம் அதிகாரம். நண்பரையே விரோதிகளாக்கும்; நாட்டிலும் வீட்டிலும் வாட்டத்தையே வளர்க்கும்" என்று எண்ணியவர்களும் உண்டு.

"நீ வீசும் வேல், எதிரியின் இருதயத்தைப் பிளக்கிறது; இரத்தம் பீறிட்டு வெளியே வருகிறது; அந்தக் காட்சியைக் கண்டு கலங்குவாயோ?"

"கலங்கேன் அதைக்கண்டு! களிப்பன்றோ வரும்! வேலின்

கூர்மையும் என் கைத்திறனும் கலந்துதரும் காட்சி கண்டு மகிழ்வேன்!"

"நீ வீசும் உடைவாள் எதிரியின் நெஞ்சிலே பாய்ந்து அவனை நிலத்திலே சாய்க்கிறது; அவன் மார்பு கத்தி முனையிலே சிக்கிக் கொள்ள, வாளின் அடிப்பாகம் தரையிலே நிற்க, அவன் மண்டியிட்டுக் கீழே நின்றால், உன் மனம் உடையாதா?"

ஏன் உடையும்? அவனைக் காணும்போதே, அவன் என் உயிர் குடிக்க வருபவன், எனவே, அவன் உயிரை நாம் குடித்து உடலைக் கழுகுக்கிட வேண்டுமென்றோ போர் துவங்குகிறது? அந்நிலையில் அவன் வதைவது கண்டு என் மனம் ஏன் உடையும்?"

"சுபாஷ் வீரா! உன் திறமையை மெச்சினேன்."

ரோம் நாட்டு ராணுவ போதகாசிரியருக்கும் அவருடைய மாணவருக்கும் இதுபோல் உரையாடல் நடக்கும், கலங்காத உள்ளமுடையோன் என்று புகழப்படும் அத்தகைய போர் வீரன் தன் ஆசைநாயகி கண்களிரு கலமென முத்துமுத்தாய் கண்ணீரை உகுக்கும்போது கலங்குவான்! அவள் கன்னத்தில் கை வைத்து திகைத்து நிற்கக் கண்டால் தீயிடை வீழ்ந்த புழுப்போல் துடித்து "சுந்தரி! துயருற்ற காரணம் என்ன என்று கேட்பான். கைகளைப் பிசைந்து கொள்வான். கண்களைக் கசக்கிக் கொள்வான். அவள் முகமலர்ந்து தன்மீது சாய்ந்துகொள்ளும்வரை வீரன் விம்முவான்! மாதரிடம் கொள்ளும் மையலின் முன்பு மனோவலிமை துரும்பாகி விடுகிறது. இத்தகைய போகத்திலே புரண்டு வாழ்ந்த விட்டிலியஸ் என்பான், திடீரென்று தர்பாரில் இடம் பெற்றான்; திமிர்கொண்டு ஆடினான்; பின்னர் சித்திரவதைக்காளானான். அவன் அதிகார வெறியால் ஆணவத்தோடு இருந்தபோதும் மற்றைய மாதர்போல் மமதையடையாமல், "ஏனோ இந்த அதிகாரம்? என்ன அவதி தருமோ இந்த நிலைமை" என்று அஞ்சியே வாழ்ந்து வந்தாள் அவன் மனைவி கலேரியா பண்டானா. போகத்தில் புரண்டிருக்கும் புல்லனின் மனைவி திடீரென தன் கணவனுக்கு முடி கிடைத்தபோது அஞ்சினாள் மகிழ்ந்தாளில்லை.

விட்டிலியஸ் அரசனானது அதிசயமான முறையிலேதான் பயின்றது களத்திலல்ல, கட்டிலறையில்; அவன் பெயரெடுத்தது அணங்குகளை அழித்தலேயன்றி அவனியிலல்ல, அத்தகைய விட்டிலியஸ் கால்பா ரோம் மன்னனானதும், ஜெர்மானியிலிருந்த ரோம் நாட்டுப் படைகளின் தலைவனாக்கப்பட்டான். பலரும் இது என்ன இவன் படைத் தலைவனாகிச் செய்யப் போவதென்ன! என்று ஆச்சரியமுற்றுக் கேட்டனர். இச்சமயத்தில் கால்பா இறந்து, ஆத்தே அரசனானான். அவர்

அரியணை ஏறியதும் வீரமில்லாத விட்டிலியஸ் வீரன் போன்று ஏது கூறினானெனில், "முடி ஏன் இவனுக்கு? முறியடிப்போம்' என்றான். ஆத்தோ ஆயாசமுற்றான். "நமக்கு சமர் ஏன்? சமரசமாவோம். இருவரும் பங்காளிகளாகிப் பரிபாலிப்போம்" என்று ஆத்தோ கடிதம்விட, விட்டிலியஸ் "களமே நமக்கு நீதிமன்றம், அங்கு நாம் சந்திப்போம்" என்றுரைத்து விட்டுத் தனது தளபதியைத் துருப்புகளுடன் அனுப்பினான் பெட்ரியாகம் என்ற களத்திலே, ஆத்தோவின் படைகள் புறமுதுகிட்டோடின. ஆத்தோ தற்கொலை புரிந்துகொண்டான். ரோம் நகர மக்கள் விட்டிலியசை மன்னனென ஏற்றுக்கொண்டனர்; தோரணங்கள் கட்டினர். தோகையர் வீடுகளை அலங்கரித்தனர்; விழாக் கொண்டாடினர். வெற்றி ஊர்வலம் நடத்தினான் விட்டிலியஸ். அதிகாரம் சிலசமயங்களிலே, இதுபோல் யாரிடமோ சிக்கிக்கொள்கிறது.

முடி மன்னனானதும் விட்டிலியஸ் நீரோவின் முறைகளைக் கையாளத் தொடங்கினான். நாள்தோறும் விருந்து, நடனச் சாலையிலே பொழுதுபோக்குதல், நண்பரைப் பிரதானியாக்குதல், எதிர்ப்போரை அழித்தல், ஆகிய கொடுமைகளுக்கோர் அளவில்லை. காமவெறியன் கண்மண் தெரியாது ஆடுவதுகண்ட அவன் மனைவி கலேரியா எவ்வளவோ இதமொழி புகன்றாள். பயனில்லை. மன்னனுக்கு அவளிடம் கவர்ச்சி கிடையாது. கலேரியா அழகியல்ல! திணறித் திணறிப் பேசுவாள்; அவளை ஓர் பொருட்டாக அவன் மதிக்கவில்லை. அதிகாரம் பருகப் பருக இனிக்கும்! ஆனால் அது ஆட்கொல்லி என்று அவள் எச்சரித்தாள். அதிகார வெறிக்குப் பலியானவர்களின் வரலாற்றைக் கூறினாள். விட்டிலியசின் வேட்கை மிகுந்த விழிகளில் தனது எதிர்காலம் இருண்டதாக இருக்குமென்பது தெரியவில்லை. சுருண்ட கூந்தலழகிகள் சுருதியுடன் பாடி, சுந்தரமாக ஆடி, பருகிடப் பானம் தந்து வேந்தனை மயக்கினர். அவன் விழி போக வழியே சென்றது. புயல் அடிக்க ஆரம்பித்தது. அவனுக்குத் தெரியவில்லை.

விட்டிலியஸ் ஓர் வீனன்; அரச அவையே கெட்டது அவனால். போரிட்டுப் புகழ் தேடினானில்லை; ரோம் சாம்ராஜ்யத்தின் செல்வத்தைச் சிதைக்கும் செல்லானானேயன்றி, அதன் சிறப்பைத் தீட்டும் ஓவியக்காரனானானில்லை. "இவன் ஓர் பாரம்!' என்று மக்கள் முணுமுணுத்தனர். வெஸ்பேசியன் என்ற தளபதி இதுவே சமயமெனத் தெரிந்து, புரட்சிக் கொடியைப் பறக்க விட்டான். ரோம் நகரை நோக்கி நடந்தான் படைகளுடன்.

விருந்துண்ணவும் கோமளவல்லிகளுடன் கொஞ்சவுமே விட்டிலியசுக்குத் தெரியும்; வீரத்துக்கும் அவனுக்கும் சம்பந்தமேது?

வெஸ்பேசியன் கிளம்பினது கேட்டு வியர்த்தான்; விடவிடத்தான்; ஐயகோ என்றலறினான். பயந்தான், பதைத்தான், கறுப்புடை அணிந்தான், கவலையின் உருவானான். கண்ணீர் பெருக்குடன் "வந்ததே வேதனை, சொன்னேனே முன்னமேயே" என்று கதறிக்கொண்டு கலேரியா வந்து நின்றாள். அவளது குழந்தைகள் கோவெனக் கதறின. மனைவியும் மக்களும் உடன்வர, மன்னன் சோகித்து நடந்து போர் வீரர்களையும் பொதுமக்களையும் கண்டு புலம்பி "இதோ நான் முடி துறக்கிறேன். உயிர் தானம் செய்யுங்கள் உத்தமரே" என்று கெஞ்சினான். ஆணவம் அழிந்து, அதிகாரம் ஒழிந்து, அரண்மனை துறந்த உயிரைக்காப்பாற்றிக்கொள்ளப் பிச்சை கேட்கப் புறப்பட்டான் போகப் பிரியன். மக்களோ எள்ளி நகையாடினர்! இரக்கங்காட்ட மறுத்தனர். "என்னே இவன் கோழைத்தனம்!" என்று இடித்துரைத்தனர். இதற்குள் வெஸ்பேசியன் வெற்றி விருதுகள் புடைசூழ நகரில் நுழைந்தான். விட்டிலியஸ் அரண்மனைக்கோடிக்கு சென்று, யாருமறியாதவாறு ஓர் மூலையில் பதுங்கிக் கொண்டான். கோலாகலத்துடன் அவன் உலவிய இடத்திலேயே உடலும் உள்ளமும் குன்றி, விட்டிலியஸ் பதுங்க நேரிட்டது, "காலம் பழிதீர்த்துக் கொள்ளும் விதம் காண்க" என்றனர் மக்கள். வெஸ்பேசியன் ஆட்கள் விட்டிலியசைக் கண்டுபிடித்திழுத்துக் காரியுமிழ்ந்து, காவலனோ, நீ! என்று கேலிசெய்து, கைகளைப் பின்புறமாகக்கட்டி, கந்தலை அணிவித்து முகவாய்கட்டைக்கருகே கட்டாரியை நிறுத்தி, முகத்தை மேலுக்கு நிறுத்தச் செய்து, விட்டிலியசை வீதி வீதியாக விரட்டிச் சென்றனர். வாண வேடிக்கைகள் வாத்திய கோஷங்கள், வனிதையர் வீசிடும் மலர்கள், ஆகிய இன்பகரமான நிலையுடன் வெற்றி ஊர்வலம் வந்த விட்டிலியஸ், அந்த ரோம் நகரில், கல்லடி மண்ணடி பெற்று, கண்டவர் ஏசிட காலைத்தட்டிக் கீழே உருட்டியும், தலையைக் குட்டித் தகாதன கூறியும், சித்திரவதை செய்திட மக்களின் இடிபட்டு ஊர் சுற்றினான். அவன் உயிர் போகுமுன்னம், அவனைச் சித்திரவதை செய்துவிட்டனர். காலேரியாவின் கண்ணீர் ஆறெனப் பெருகிற்று. "சிங்காதனமென்பது ஓர் பாம்பு புற்று! அதன் மீதமர்வோரை ஏமாந்த நேரத்திலே, புற்றிலிருந்து கிளம்பும் பாம்பு; பொல்லாத பற்களால் கடித்துக் கொல்லும்' என்று கூறிப் புலம்பினாள். அவளது மக்களும் மருண்டு அழுதனர்.



# பகலிலே விதவை

"ஓ , என் காதலரே! ஒன்றுக்கும் அஞ்சாதீர்! மாற்றாரின் கூர்வாள் என் மார்பிலே பாயாது! தோற்றேன் நான் என்றாலும், மாற்று மருந்துண்பேன். நீதியும் நிலையும் குறைந்து என்ன; மதி குறைந்ததோ? இல்லை! எனவே நான் எதிரியிடம் சிக்கி, இன்னலுக்கும் இழிவுக்கும் ஆளாகி இடறுற்று இறப்பதைவிட எதிரிக்கு என் பிணத்தையே பரிசளிப்பேன். என்னைப் பிடித்திழுத்து. இரும்புச் சங்கிலியால் பிணைத்துக் கட்டி, அவை நடுவே நிறுத்தி அவமானம் செய்வித்து சிறைதனிலே தள்ளிச் சீரழித்து, நான் சித்திரவதைப்படுவதைக் கண்டு சிரித்திட எண்ணி மாற்றாரின் கரம் தீண்டா முன்னம் இதோ இந்த நஞ்சைப் பருகிடுவேன்; நானே மாள்வேன்... நன்கு யோசித்தேன்! நான் தற்கொலை செய்து கொள்வேன் ஊழியரே! உருகாதீர்; எனக்குற்ற துயர்கண்டு உள்ளம் பகைக்காதீர்; ஊராளும் பேறு பெற்றேனில்லை யென்றாலும் எதிரியிடம் உயிர் இழுக்கும் இழுக்கைப் பெறேன். அதுபோதும் விடை தருவீர். விம்மாதீர்; வீண் பீதி கொள்ளாதீர்; மானம் மரணம் என்றிரண்டுண்டு கண்டீர், பின்னையதால் முன்னையதைப் பெறுவேன். போவீர்"

சுற்றி நிற்கும் வேலையாட்களிடம் இங்ஙனம் பேசுகிறான் சாபீனஸ். வேலையாட்கள் விம்முகின்றனர், வியர்கின்றனர் சாபீனஸ் தற்கொலை செய்துக்கொள்ளத் தீர்மானித்துவிட்டு வேலையாட்களை அனுப்பி விட்டான்.

பாரீர், சாபீனசின் மாளிகை தீக்கிரையாயிற்று! கேளிர் செய்தியை. செத்தான் சாபீனஸ். விஷங்குடித்தான் உயிர் விடுத்தான்.

சுதந்தர வீடே அவனுக்கு சுடுகாடாயிற்று. தன்னைத்தானே தகனம் செய்து கொண்டான்.

சாபீனஸின் மாளிகை தீக்கிரையாற்றி, விஷமருந்தி வீழ்ந்த சாபீனஸ், வீட்டையும் கொளுத்திக் கொண்டான் என்று ரோம் மக்கள் கூறிக்கொண்டனர். சாபீனஸின் மனைவி ஈபோனியாவின் வீட்டிலே அவள் கேட்போர் மனம் உருக்க கதறினாள். "மாண்டாயோ மணவாளா! மனையே பிண அறையாயிற்றே! ஏனோ உயிர் விட்டீர்! என் நெஞ்சில் நெருப்பிட்டீர்! தேனோ தற்கொலை தேறுதல் ஏதெனக்கு?" என்று தேம்பினாள்.

ஊரெங்கும் சாபீனசின் தற்கொலை பற்றியும் மாளிகை சாம்பலானது பற்றியும். மனைவியின் மனம் உடைந்தது பற்றியுமே பேச்சாக இருந்தது.

"எனது எஜமான், எம்மிடம் ஏற்கனவே கூறி விட்டார் உயிர்விடப் போவதாக" என்று கூறி, சாபீனசின் சேவையிலிருந்தோர் சோகித்தனர். தன் மானத்தை இழக்காதிருக்கத் தற்கொலை செய்துகொண்ட கணவனை எண்ணி எண்ணி ஈபோனியா கதறிக்கொண்டிருந்தாள். உற்றார் உறவினர், "தேம்பாதே, மாதே!" என்று தேறுதல் கூறினர்.

ஆனால் சாபீனஸ் இறக்கவில்லை! அவனது மரணத்தைப் பற்றி ஊரும் உற்றாரும். மாற்றாரும் மனைவியும் பேசியபோது அவன் அதே ரோம் நகரில் இருந்தான். ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகே அவன் உண்மையில் இறந்தான். அது வெஸ்பேசியன் மன்னனான போது! மணிமுடிமேல் ஆசைக்கொண்டு, ரோம் சாம்ராஜ்யத்திலே புரட்சியும் சதியும் புரிந்தவர்களிலே, சாபீனஸ் ஒருவன்! இவன் ஓர் சாதாரணச் சீமான், ஆனால் எண்ணமோ அரண்மனையளவு வளர்ந்து. படை யொன்று திரட்டினான். பாராள்வேன் என்றான்; படுதோல்வி அடைந்தான். பின்னர் யோசித்தான், இனி இருந்தால் இம்சைக்கு இறையாதற்பொருட்டே; எனவே எதிரியிடம் தப்பிப் பிழைக்கத் தந்திரமே சரி" என்று துணிந்தான் எனவே விஷமுண்டு மாண்டு போகத் தீர்மானித்ததாக வேலையாட்களுக்குக் கூறினான்.

இரண்டு பேருக்குமட்டுமே உண்மையை உரைத்தான். மற்றவர் அவன் மாண்டானென்றே நம்பினர். மாளிகையையும் கொளுத்தி விட்டான். ஆனால் அவனது மாளிகையிலே இருந்தவோர் சுரங்கத்திலே சுகமாக இருந்தான். ஊரார் பேசுவதும், உற்றார் தேம்புவதும், மனைவி கதருவதும் மாற்றார் சிரிப்பதும் தனது நம்பிக்கைக்கு பாத்திரமான அந்த இரு வேலையாட்கள் மூலம் தெரிந்துகொண்டான். நெடுநாட்கள்வரை. மனைவியும் நிஜ மெதுவெனத் தெரியாது விம்மினாள். பின்னர் வேலையாள் மெல்லக் கூறினான் விஷயத்தை. கள்ளத்தனமாகக் கணவனைச் சந்தித்தாள் மனைவி குகையிலே. அவர்கள் இரவிலே சந்திப்பர். பகலிலே விதவை! பதியுடன் இரவில் அளவளாயினால்! பல நாட்கள், வருடங்கள், இது ரகசியமாய் நடந்தது.

ஈபோனியா கர்ப்பவதியானாள்! கைபிசைந்து கொண்டாள். ஊரார் முன் எங்ஙனம் உலவ முடியும்! என்ன எண்ணுவர்! தந்திரம் இதற்கும் செய்தான். உடல் வீங்கும் தைலமொன்று தருவித்தாள். பூசிக் கொண்டாள்; பொம்மெனப் பருத்தாள். சூல்கொண்ட மாதெனப் பிறரறியா வண்ணம், உருவையே மாற்றிக்கொண்டாள். பிரசவ வேதனையைச் சகித்துக்கொண்டு பிறர் அறியாதபடி ஏற்பாடுகள் செய்து இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள். சாபீனஸ் இறந்தானென்று ரோம் எண்ணிக்கொண்டிருந்த நேரத்தில் சுரங்கத்திலே

சுந்தரி ஈபோனியாவுடனும், இரு குழந்தைகளுடனும், சாபீனஸ் கொஞ்சிக் கிடந்தான். ஓராண்டு ஈராண்டல்ல, ஒன்பது ஆண்டுகள். இந்த ரகசிய ஏற்பாடு வெற்றிகரமாக நடந்து வந்தது.

ஆனால், மாலையிலே ஈபோனியாவின் விதவைக் கோலத்தையும் பிளந்துகொண்டு களிப்பு பிறப்பதையும் அடிக்கடி அவள் வெளியே போவதையும் கண்டவர். இதிலேதோ மர்மம் இருக்க வேண்டும் என்று சந்தேகித்தனர். ஒன்பதாண்டுகள் ஊரை ஏமாற்றினாள். ஆனால் கடைசியில் கண்டுபிடித்து விட்டனர். குகையிலே கணவனும் இரு மக்களும் இருந்தனர்; அதுகாலை மன்னனாக இருந்த வெஸ்பேசியனின் செவிக்குச் செய்தி எட்டிற்று, "பிடித்திழுத்துவா" என்றார். அரசனின் ஆட்கள், செத்ததாகக்கூறி, ஊரை ஏய்த்த புரட்டனையும். கணவனுக்காகச் சூது நடாத்திய சுந்தரி ஈபோனியாவையும், அவர்களின் காதற் கனிகள் இரண்டையும் மன்னன் முன் கொண்டுவந்து நிறுத்தினர்.

மன்னரே! மன்னித்தருளும்! மருட்சியால் என் கணவன், இங்ஙனம் தலைமறைந்து கிடந்தார். மணவாளனைக் காப்பாற்ற நானும் உடந்தையாக இருந்தேன். என் கணவன் எக்குற்றம் புரிந்தவரென்ற போதிலும், இந்த ஒன்பது ஆண்டுகள். இருந்தும் இறந்தவராக இருந்த தண்டனையே போதும், சுகமின்றி சுற்றத்தார் பக்கமின்றி, வீடின்றி வேலையின்றி, காற்றடித்தாலும் கண்டுகொண்டு வருபவரின் காலடிச் சத்தமோ என்று கலங்கி வாழ்ந்தார். இதைவிடக் கொடுமையான தண்டனை, கொற்றவனே உண்டோ? என்று ஈபோனியா புலம்பினாள்; வாதாடினாள், மன்னன் மமதையின் மடியில் கிடந்தான்; மாதின் மொழி கேட்க மறுத்தான்.

"உன் கணவன் செய்தது ஒரு குற்றம், இரண்டு புரட்சி செய்தான், ஊரையும் ஏய்த்தான். எனவே அவன் உயிர்போகத் தண்டனை தரலே முறை! ஒன்பதாண்டுகளுக்கு முன்பே ஒழிந்தான் என்று ஊர் நாடு கூறிவிட்டது. இனியும் இவன் இருப்பானேன்?" என்றான். சாபீனஸ் கொலைக் களத்தில் உயிர் விட்டான்.

இவ்வளவு நெஞ்சிரக்கமற்ற வெஸ்பேசியன் மன்னனாக இருந்த வரலாறு விந்தையே?

வீணன் விட்டிலியஸ் விருந்துண்டு கிடக்கையில் வெஸ்பேசியன் என்பான் அவனை வீழ்த்திய வரலாறு முன்னம் கூறினோம்- வெஸ்பேசியன் விருதுடன் அரசவை புகுந்தான். கிளாடியஸ் மன்னனான காலத்திலே வெஸ்பேசியன் காடாண்டான்! அது காலை அவன் மனைவி டொமில்லா துணை நின்றாள். அவன்

மன்னனானபோது மாதவள் இல்லை - இறந்து போனாள். கோலாகலக் குலுக்கிகளும், கொடுங் கோன்மைக்காரர்களும் கூத்தாடி ரோம் சாம்ராஜ்யத்தில் சிற்சில சமயங்களிலே, சேற்றில் முளைத்த செந்தாமரைபோல், சீரும் நற்குணமும் கொண்ட மங்கையர்க்கரசிகள் உதித்தனர். ஆனால் அவர்கள் ஆடம்பர ஆரத்தின் நடுநாயகமாகவோ, கவிகளின் கற்பனைக்குக் காட்சியாகவோ. ஓவியக்காரரின் தீட்டுகோல் காட்டுமிடமாகவோ இருந்ததில்லை.

தோள் வலியும் வாள் வலியுந் தரும் அரசே, மக்களின் மனக்கணல் பட்டுக் கருகிற்றென்றால், சூதுச் சூலில் தோன்றி வஞ்சனைத் தொட்டிலில் ஆடி, சூழ்ச்சிப் பள்ளியில் பயின்று கெடுமதியுடன் தோழமை கொண்டுலவியவரின் அரசு ஆலெனத் தழைக்க மார்க்கமுண்டோ! தலைவலி தீர மருந்துண்டு குலைவலி கண்ட கதை போலாயிற்று. வீணன் விட்டிலியஸ் வீர வெஸ்பேசியனை ரோம் மக்கள் ஆதரித்த செயல் விட்டிலியசை வீழ்த்திய வெஸ்பேசியன் முடி தரித்ததும், மக்களைக் கொடுமைப் படுத்துவதிலே மடியின்றி உழைத்து தடிகொண்டு கனியை தாக்கிடும் திருடன்போல், வரிகொண்டும் வாள் கொண்டும் நரிக்குறி கொண்டவரின் துணை கொண்டு, கரி கரும்புக் கழனி நுழைந்ததுபோல், மக்களை அழித்தான், இறந்துபட்ட தன் மனைவி டோமிடில்லாவுக்கு, கோயில்கள் கட்டினான். மானே! மரகத மணியே! தேனே என் உயிர் நீ தானே! என்று தன் பழைய காதலில் சீனல் என்பாளுடன் கொஞ்சிக் குலவினான். அந்த வஞ்சியோ தஞ்சமடைந்தோரைத் தவிர மற்றவரைப் பஞ்சென மதித்து அரசன் ஆணையை ஏவி அவர்களை அவதியில் ஆழ்த்தினாள். எதற்கும் வரி! வரி மேல் வரி! கொள்ளை மேல் கொள்ளை! கொடுமையின் எல்லையைக் காணவே அரசுரிமை கிடைத்ததெனக் கோமான் கருதினான் போலும். அவனடியில் ரோம் சிக்கிச்சில காலம் சிதைந்தது!



# ஜூடேயா நாட்டு ஜோதி

"ஜூ டேயா நாட்டு ஜோதியே! சோபிதமான பெர்னீசி! பிரியநாயகி! இன்பவல்லி! எப்படி நான் உன்னைப் பிரிவேன்! எங்ஙனம் மறப்பேன்! சித்தம் சோருதே! செய்வதென்ன வென்று தெரியாது திகைக்கிறேன்! தேனே இனி உன்னைப் பிரிந்து நான் வாழ்வதிலே ருசி இருக்கமுடியுமா? நெஞ்சிலே பெரு நெருப்பு மூண்டுவிட்டதே! நேத்திரானந்தவதி! நான் உன்னை எங்ஙனம் இழப்பேன்?"

ஏன் இழக்கவேண்டும்! என்னுயிரே, நம்மைப் பிரிக்க இயமனாலும் முடியாது என்பீரே! உயிரும் உடலும், மலரும் மணமும், நரம்பும், நாதமும், மணியும் ஒளியும், கனியும், ருசியும், பிரியுமோ! பிரிவின் அவை பயனுள்ள தாமோ? ஏன் தடுமாற்றம்? நம்மைப் பிரிக்க வரும் பேயை விரட்ட உமக்குச் சக்தி இல்லையா? நெஞ்சிலே வீரம் எழவில்லையா? என்னுடன் கொஞ்சிக் குலவிய பூபதி! நான் செய்த குற்றமென்ன? ஏன் நாம் பிரியவேண்டும்? தீரவானான நீர் தயக்கம் கொள்ளலாமா?"

தீரமற்றவனும் ஈரமற்றவனும் போலத்தான் நான் இருக்கவேண்டி நேரிட்டது!

"ஏன் உமது வீரம் எங்கே போயிற்று? அன்று கண்டவர் கலங்க, கேட்டவர் மிரள, ஜெருசலம் நகரை தாக்கித் தகர்த்த வீரம், இன்று என் பொருட்டு சற்றே வெளிவரக் கூடாதா?

"மாதரசி! உன் மலர் முகத்தை மறைத்துக் கொள்! இல்லையேல் நானேனும் என் கண்களை மூடிக் கொள்கிறேன். வேண்டாம், விம்மி, விம்மி, என் விலாவை நொறுக்கதே! நான் வீரன், ஆனால் இச்சமயம் வீரம் பயனில்லை! நான் உன் ஆசையை ஆபரணமாக அணிந்தவன், ஆனால் இப்போது அதைச் கழற்றிவிடத்தான் வேண்டும். உன் கனிமொழி கேட்ட செவி, இனி விருந்தை இழந்துதானாக வேண்டும். போ! போ! என் எதிரே இனியும் இராதே! என்னை உயிரோடு வதைக்காதே! நீயோர் வானவில்! கண்டேன் உன் அழகை! போதும் இனி மறைந்துவிடு!"

"காதலா! கல்லா உன் மனம்? இரும்பா கரையாதா"

"மின்னலே மறைந்துவிடு!"

"இதற்கா, இவ்வளவு இன்புற்று வாழ்ந்தோம். தோணி இப்படிக் கவிழ்ந்துவிடுமென்று தெரிந்திருந்தால், உல்லாசப் பயணத்தை துவக்கியே இருக்கமாட்டேனே! என் ஜென்ம பூமியை மறந்தேன். ஜூடேயா நாட்டு நினைப்பும் விடுத்தேன்! அரண்மனை அங்கும்

உண்டு. அந்தஸ்து உண்டு. அரசிளங்குமாரர்கள் அடிபணியை முன்வந்ததுண்டு. எல்லாம் எவர் பொருட்டு உதறினேன்? இன்று நான் வீசி எறியப்போகிறேன்."

"நான் உன்னை உதறி எறிவேனோ? உன்னையும் என்னையும் இந்தக் கொடிய "சட்டம்' பிரித்து வைக்கிறது! மலரணைப் போன்றிருந்த பாதையை விட்டு நான் இனி, கட்டுக்காவல் சம்பிரதாயம், சட்டம் முதலியன பதிந்துள்ள "அரச பாதையில் நடந்தாக வேண்டும்! என் இன்பத்தை நான் துறந்தாகத்தான் வேண்டும்! நாரீமணி நாடு இடும் கட்டளைக்கு நான் தலைவணங்கத்தானே வேண்டும்; சட்டம், என் ஆசையை மட்டந்தட்டிவிட்டது!"

"சட்டம்! ஏட்டிலே உள்ள சில சொற்கள்!"

"ஆம், ஆனால் நான் அவைகளுக்குக் கட்டுப்பட்டவன்! அந்த சட்ட திட்டத்தைக் கொண்டே அரசனாகிறேன். அதற்கடங்கி மக்கள் நடக்கவேண்டும். இல்லையேல் தண்டனை என்பது நியதி; அத்தகைய நான் சட்டத்துக்குத் தலைவணங்கத்தானே வேண்டும். கடமை என் காதலைக் கரியாக்குகிறது. காரிகையே, என்னை மற. என்னை மறந்துவிடு! உன் ஜென்ம பூமி செல், உன் வாழ்வு அங்கேனும் வளம் பெறட்டும். என்றோ ஓர் நாள் கேட்ட கீதம் செவியில் ஒலிப்பதுபோல், எப்போதேனும் ஒலிக்கட்டும்."

"பிரிந்து போகத்தான் வேண்டுமா?"

"ஆம்; எதிரிலே தேன் குடம், ஆனால் அதைச்சுற்றிக் கொண்டிருக்கிறது ஓர் சர்ப்பம், விழித்தபடி!"

"என் வாழ்வு பாழாவது பற்றி "சட்டம்" என்ன சொல்லுமோ?"

"தியாகம் என்றுரைக்கும்".

"கடமை எனும் மடமையால், காதலைக் கொளுத்தினீர்! நன்று! நான் சென்றபின், நீர் கொலு வீற்றிருக்கும், ஒரு முடிக்காக நேசித்த மாதின் நெஞ்சைப் பிளந்தீர்! நேர்மை இதுவோ என்று உமது நெஞ்சைக் கேளும். கலங்கிய என் கண்கள், கனல் கக்கும், இரத்தம் சொரியும் நாளில், நீர் ஒளிவீச, சந்தமணிந்து, நீராடி பட்டாடை பூண்டு பட்டத் தரசராகிறீர்; பழிகாரரே!

"கதிரோன் நிலைகுலைந்தாலும், அவர்களின் காதலைக் குலைக்கமுடியாது. அலை அடங்கினாலும் அவன் மனத்திலே அவள் எழும்பும் ஆவல் அடங்காது. அவனெதிரிலே பொற்குன்று அமைத்துத் தந்து. இதை ஏற்றுக்கொள், என்று இயம்பினாலும், பூங்கொடியின் ஓர் புன்சிரிப்புக்கு இந்த குன்று கடுகத்தனையும் ஈடாகுமோ என்றே

கூறுவான். டைடஸையும் பெர்னீசியாவையும் பிரிக்கமுடியாது" என்று பேசிய ரோம் மக்கள், ஆச்சரியத்தால் வாய் பிளந்து நிற்கும்படியாக டைடஸ் பட்டத்தரசனாவதற்குள் தனது பாசத்தை அறுத்துக் கொண்டான். மன்னனாக வரவேண்டிய நிலைமை ஏற்பட்டதும், மதிமுகவதியை, "கதி இதுதான், போய் வா" என்று கூறியனுப்பி விட்டான். அவளை அவன் பிரியும்போது, இருவருக்குள் நடந்த பேச்சே முதலிலே காணப்படுவது. "இனி நான் மன்னன், உன்னோடிருந்தால் முறையாகாது. ஊர் ஏற்காது, சட்டம் இடந்தராது. எனவே போயிவிடு" என்று டைடஸ் தன் மனதைக் காணிக்கையாகப் பெற்று தனக்கு இன்பமெனும் வரந்தந்த தேவியை நோக்கிக் கூறி ரோம் நகரைவிட்டு வெளியேறிவிட்டான். அவனுடைய நெஞ்சிலே குடியேறியவளை அவன், "வீட்டைக் காலி செய்து கொடுத்துவிடு" என்று கூறிவிட்டான்; ஆச்சரியம் இதுவன்றோ? கடமையை முன்னால் வைத்தான், காதலையும் உதறினான் டைடஸ்.

டைடஸ், வெஸ்பேஸியனின் மகன் வீரமிக்கவன், கோரமான யுத்தமிட்ட ஜூடோவை வென்றவன்; ஜெருசலம் நகரைத் தாக்கிப் பிடித்த தீரன்; போர்களத்திலே புகழ்தேடிய வேளையிலேயே, டைடஸ் ஜூடேயா மன்னனின் தங்கை சுந்தராங்கி பெர்னீசியாவைக் கண்டு, கட்டழகியின் கருத்தறிந்து களிப்புக் கடலில் மூழ்கி, காதல் உணர்வெனும் லோகத்திலே காணல் நினைத்தல் தவிர்த்து, வாழ்ந்தான். ரோம் நகர் வருகையில், வாகை சூடிய டைடஸ் வஞ்சியையும் உடனழைத்தே வந்தான். பெர்னீசியாவும் நாட்டையும் வீட்டையும் பிரிய நாதனுக்காகப் பிரிந்தாள். ரோம் நகரிலேயே சரசவல்லிகள் கூட்டத்திலே, டைடஸ்-பெர்னீசியாயும் காதலின் கனிவு பற்றிப் பேசாதவரில்லை. ஏற்கெனவே மனைவியாக இருந்தவளை, டைடஸ் விலக்கிவிட்டான். பெர்னீசியாவையே அரசியாக்கவும்கூட அவன் ஆசைப்பட்டான். அரசிளங்குமரன் போகத்தில் புரண்டு பொழுது போக்குகிறான் என்று மக்கள் கருதினர்; ஆனால் யாரும் எதிர்பாராதது நடந்தேறியது.

வெஸ்பேசியன் மாண்டான். டைடஸ் மன்னனானான். உடனே அவன் தன் வாழ்க்கையே அடியோடு மாற்றிக் கொண்டான். மது விடுத்தான்! மலரணை துறந்தான்! கோல் கொண்டதும் வேல் விழியாரின் விழாவில் கலப்பதை விடுத்தான்; அரசுரிமை ஒரு கடமையென உணர்ந்தான். ஆனந்தவல்லியை "சற்றே விலகியிரு" என்றுரைத்தான். வெளிநாட்டுக் கன்னியை ரோம் நாட்டு அரசியாக்குவது கூடாதென்று மக்கள் கூறினர்; சட்டம் பேசினர், மன்னன் டைடஸ் "மக்கள் விருப்பமே என் சட்டம்' என்றுரைத்து,

பெர்னீசியாவைப் பிறந்த நாடு அனுப்பிவிட்டான்.

அறிவும் அருளும் அன்பும் ஆற்றலும் செறிந்த அவனுடைய ஆட்சி மக்களுக்கோர் நல்விருந்தாக இருந்தது. ஆனால் மூன்றே ஆண்டு வாழ்ந்தான் மன்னனாக, பின்னர் முரட்டுக் குணமும் குருட்டுக் காமமும் கூத்தாடும் உள்ளத்தனானான். அவன் தம்பி டோமீஷியன் காமாந்தகாரத்தில் கரைகண்டவன்; கொடுமைகளே அவனுக்கு விளையாட்டு; கோலாகல வாழ்வே அவனுக்குப் பிரதானியர். செண்டாடி, மாதரைக் கொண்டாடி திண்டாடும் மக்களைக் கண்டு கூத்தாடும் டோமீஷியன் ஆபாச ஆட்டமாடினான். வீட்டார் விருப்பத்துக்காக. அவன் மணந்தது ஓர் வனிதையை; வேடிக்கைக்காகத் தேடிக்கொண்டது வேறு பலரை; வேல் விழியால் அவனை வென்றது வேறொருத்தி; அவள் பெயர் டொமீஷியா, உயர் குடியில் உதித்த இந்த உலுத்த மனக்காரி, மங்கைப் பருவத்திலேயே காமத்தை மழலையாக்கிக் கொண்டு நர்த்தனமாடியவள். லாமியா என்பவனை மணம் செய்துகொண்டாள்; டோமீஷியனைக் காதலனாகக் கொண்டாள்; ஊர் சிரிக்கக் கண்டாள்; "ஊளையிடட்டும் நமக்கென்ன?" என்று கருதி, மக்களின் பேச்சை உதாசீனம் செய்து தனது நிலை உயர, டோமீஷியனைத் தூபமிட்டுத் தொழுதாள்.

டோமீஷியன் மன்னனானதும், லாமியாவின் மனைவியைத் தன் மனைவியாக்கிக் கொண்டான். சீமாட்டி இராணியானாள். டோமீஷியன் அவனது அண்ணன் மகள் ஜூலியா என்பாளை மணந்துகொண்டு வாழவேண்டுமென்று யோசனை கூறப்பட்டது. ஜூலியாவும் ஓர் சிங்காரியே. சிங்காரி மட்டுமல்ல, சகல விதத்திலும் ஜோடி. ஆனால் டோமீஷியன், டொமீஷியாவை மணந்து கொண்டான். ஜூலியாவை வேண்டாமென்றான். ஜூலியா கோவித்தாளா? இல்லை! புன்சிரிப்புடன் இருந்தாள். மன்னனை மறந்தாளா? இல்லை! வீழ்வான் வலையில் ஓர் நாள் என்று தீர்மானித்தாள். ஆம் அவனும் அவள் எதிர்பார்த்தபடியே வீழ்ந்தான். ஜூலியா, சாபீனஸ் என்பவனின் மனைவியானதும், மன்னனுக்கு அவள்மீது மையல் உண்டாயிற்று. அந்தத் தையலும் அதற்கேதும் தடை சொல்லவில்லை. இவ்விருவரின் சல்லாபம் ஊரெங்கும் கேலி செய்யப்பட்டது.

பார்த்தாள் டொமீஷியா, வண்டு வேறு மலரில் தேன்மொண்டு குடிக்கத் தலைப்பட்டதைக் கண்டாள். கொதித்தாளா? இல்லை. வெறுத்தாளா? இல்லை. தனக்குகந்தவர்களுடன் அவள் ஆடிப்பாடிக் காலங்கழித்தாள். ஹாஸ்ய நடிகன் பாரீஸ் என்பானொருவன்; அவன் டொமீஷியா இராணியின் பிரியத்திற்கு இருப்பிடமானான். அரசனின்

சேட்டைக்கு அரசியாருடையது அணுவளவும் குறைந்ததாக இல்லை. ஜூலியாவின் கணவன் இறந்தான். இறந்தான் என்றால் கொல்லப் பட்டான். கொற்றவன் கட்டளையால் என்பதே இங்கு பொருள். குறுக்கே நிற்கும் சுவரை இடித்துத் தள்ளிவிட்டாள், நந்தவனத்திலே தாராளமாக உலாவலாமன்றோ!

டொமீஷியாவை மன்னன் விலக்கிவிட்டான். அவள் ஆயாசப்படவில்லை. அரசியாக இருந்தபோது பெற்ற நேயர்களின் ஆதரவில் வாழ்ந்து வந்தாள். ஜூலியா கருவுற்றாள் விதவைக் கோலத்துடன்! மருந்துண்டால் மாற்றுக்குப் பலன். அவளே மாண்டாள். மன்னவன் கதறினான்; ஓய்த்தான். ஒய்யாரியில்லாது வாழ்வதெப்படி? என் செய்தான்? பழையபடி டொமீஷியாவை மனைவியாக்கிக்கொண்டான். மீண்டும் அரண்மனைக்குக் குடியேறிய டொமீஷியா, தன் பழைய நண்பர்களின் பழக்கத்தை விட்டுவிடவில்லை; மன்னன் கோபித்தான். அவளைக் கொன்றுவிடுவதெனத் தீர்மானித்தான்.

அவள் பெயரும், மற்றும் மன்னனின் கோபத்திற்கு ஆளான வேறுசிலர் பெயரும் குறிக்கப்பட்ட சீட்டு மன்னனின் பஞ்சணையில் கிடந்தது. நாளைய தினம் தலை போகப்போகிறது! ஆனால்!

மன்னனைத் தன் மழலையால் மகிழ்வித்த ஓர் குழந்தை இந்த சீட்டை எடுத்து வைத்துக்கொண்டு விளையாடுகையில் டொமீஷியா பார்த்தாள்; பதைத்தாள்! யாரார் கொல்லப்பட வேண்டுமென்று அந்தச் சீட்டிலே குறிக்கப்பட்டிருந்ததோ அவர்களைக் கூப்பிட்டு விஷயத்தைக் கூறினாள். என் செய்வது? என்று யோசித்தனர்.

கடிக்க வரும் பாம்பை அடித்துக் கொள்வதுதானே முறை என்று துணிந்து, டோமீஷியன் துயிலுகையில் படுக்கையிலேயே அவனைக் குத்திக்கொன்றனர். மன்னன் மாண்டதால் தன் உயிர் தப்பியது என மகிழ்ந்து டொமீஷியா மேலும் பல நாட்கள் தனது லீலாவிநோத வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்துவிட்டு மரணம் அழைக்கும் போது போக மனமின்றிப் போனாள்.



# காம வெள்ளம்

மு ல்லையும் ரோஜாவும் விரித்த, மணங்கமழும் மலரணைமீது சாய்ந்துகொண்டு. மதுகோப்பையுடன் ஓர் மாதும், மதுரகீதம் பாட மற்றோர் மாதும், மேலே சாய்ந்துகொண்டு தன் மிருதுவான கரத்தால் அவன் அடிவருட மற்றோர் அணங்கும் இருக்க, கோலாகலமாக இருந்த குமரன் முன்வந்து நின்ற வேலையாட்கள், "ஐயா! நின் அருமை மனைவி அக்கினிப் பிழம்பென நிற்கின்றாள். "ஆறாத்துயர் என்னைத் துளைக்கிறதே" என்று அலறுகிறாள் என்று கூற, "அறிவோம் அதனை நாம்!" அவள் விசாரம் அறியாமையால் வருவது. நாம் செய்யவல்லதென்ன உளது! என்னை மணந்தாள், என் நிலை உணர்ந்து மணைவினை என்ற சம்பிரதாயத்தைக் காக்க நான் அவளுக்கு மாலையிட்டேன். ஆனந்தம் பெற இதோ என் ஆசை நாயகியாரை அடைந்தேன். இதிலென்ன குற்றம்? இவள் ஏன் ஏங்கவேண்டும்? என்றுரைத்துவிட்டு, "ஏடி! கருங்குழலி! கற்கண்டு மொழியாளே! மதுக் கிண்ணத்தை முத்தமிட்டு எனக்குத்தா!" என்றுரைத்து விட்டுச் சிரிக்க, வேலையாள், "மற்றுமொன்றுளது ஐயனே! உமது தங்கை பாஸ்டினா அம்மையாரைப்பற்றியும் ஊரார் ஏதேதோ கூறுகின்றனர். சக்கரவர்த்தியும் சித்தம் சோர்ந்துக் கிடக்கிறாராம். பாஸ்டினாவின் செயல்கள் பாதகம் மிக்கன என்று பாமரர் பேசிடக் கேட்டு பார்த்திபன் பதறுகிறாராம். இத்தகைய இழுக்கு எனக்குற்றதே என்று ஏங்குகிறாராம். எந்த நேரமும் போர் மூண்டுவிடும் போலிருக்கிறது. உமது தங்கையைச் சற்று இலைமறை காயாகவேணும் நடந்துகொள்ளச் சொல்லக்கூடாதா என்று நம் நலனில் நாட்டமுடைய நண்பர்கள் கூறுகின்றனர். நாடாள்பவனின் நாயகி, நாட்டாரின் பழிக்கும் தூற்றலுக்கும் ஆளாவது கூடாதன்றோ?" என்றுரைக்க, "ரோம் நாட்டு மக்கள் நீதி பேசுகின்றனரோ! மிக நன்று! மடையர்களுக்கு என்ன தெரியும்!

பாஸ்டினா என் தங்கை, இந்தப் பஞ்சைகட்குப் பயந்து வாழத் தேவையில்லை. அவள் பட்டத்தரசி, பரிமளவல்லி ஆனந்தமாக வாழ வசதி உள்ளவள்! ஆடிப்பாடி காலம் கழிக்கிறாள்" என்று மதுவும் மங்கையும், மதிநிதி என்று கொண்டு மகிழ்ந்திருந்தோன் கூற, "ஆடலாம், பாடலாம் ஆனால் ஆணழகரை வேட்டையாடுவது, அரசியர்க்கு அடுக்குமோ?" என்று கேட்கின்றனர் என்று வேலையாள் மறுமொழி கூற, மலரணைமீது சாய்ந்திருந்தோன் கூறுகிறான்.

"என்னே மக்களின் மதி! என் தங்கை பாஸ்டினா சுந்தரி அவளைப் பெண்டாக்கிக்கொண்ட மன்னனோ. சுருங்கிய முகத்தவன், என் தங்கை தங்கச் சிலை; அவன் வளைந்த திரேகத்தான்; பாஸ்டினா

புன்சிரிப்புக்காரி; அவன் சோகமே குடிகொண்ட முகத்தான். அவள் ஆனந்தவல்லி; இவனோ ஏங்கிக்கிடக்கும் ஏமாளி. இளமை ததும்ப, எழில் ததும்பக் காதல் ததும்ப காட்சி தரும் பாஸ்டினா! மூப்புற்றுக் கண்கள் குழிந்து, கவலை மிகுந்து, தலை நரைத்து. உடல் இழைத்து ஊராள்வோனாதலால் உள்ளமும் காதல் வெள்ளத்தைத் தாங்கும் வகையை மறந்து கிடக்கும் மன்னனோடு, பஞ்சணையில் பதைப்புறு காதலால், முகமலரோடு முகமலர் ஒத்தி இழுத்தும் போர்த்தும் கிடப்பாளோ! ஈதென்ன மதி! கிளி மொழி மாது அந்தக் கிழ மன்னனோடு கொஞ்சிக் குலவிய இயற்கை இடந்தருமோ! இடர்படும் மனத்தினனாக மன்னன் இருத்தல் முறையன்று. பொருந்தாமணம் அது! பூரிப்பு எங்ஙனம் வரும்" என்று கூறிவிட்டு. "இனி இன்பத் துறையிலே ஆடிடும் என்னிடம், ஏக்கச் செய்திகளைக் கொண்டு வராதே! போ!" என்று துரத்திவிட்டு தனது கேளிக்கையைத் தொடர்ந்து நடத்தலானான்! ரோமில் தானே இக் காட்சி இருக்க முடியும்! டொமீஷியன் இறந்த பிறகு, நெர்வா என்பான் ரோம் சக்கரவர்த்தி யானான். ஆனால் நெர்வா வயோதிகனானதால் உடனிருந்து உதவ டிராஜான் என்பவனை அமர்த்திக்கொண்டான். டிராஜான் மக்கள் மனமகிழக் கோலோச்சினான். இவன், ஹேட்ரியன் என்ற இளவலைத் தன்னுடனிருந்து அரசாட்சியை நடத்திவரப் பணித்தான். ஹேட்ரியன், பின்னர் டிராஜன் மன்னனின் நெருங்கிய பந்துவான சாபினா என்பாளை மணந்துகொண்டான்; மன்னனுமானான். சக்கரவர்த்தியின் மனைவியான சாபினா, கண்டது சோகமின்றி வேறல்ல. சாபினாவை ஹேட்ரியன் மிக்க கொடுமைப்படுத்தினான். கர்வமிக்க இவனது ஆட்சியிலே, சாபினா சாரற்ற சக்கையான வாழ்க்கைபெற்று வதைந்தாள். ஹேட்ரியன் தன்னை மிஞ்சினவர் எத்துறையிலும் எவருமே கிடையாது என்ற இறுமாப்புடன் கிடந்தான். ஹேட்ரியன் வீரமிக்க கதைகளைக் கேட்டுப் பூரித்த மக்கள், பின்னர் அவனது ஆணவத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டனர்.

இத்தகைய ஹேட்ரியன், டைடஸ் அண்டோனினஸ் என்பானைத் தனக்குப் பிறகு, ரோம் நாட்டுப் பட்டத்தரசனாக்க வேண்டுமென்று பணித்தான், டைடஸ் ஆண்டோனினஸ் பெண்டாகக் கொண்ட பாதக்யின் பெயரே பாஸ்டினா! அவள் வாழ்க்கைப் பஞ்சணையிலே, கொஞ்சிக் குலவிடும் குமரர்கள் புடைசூழப் புரண்டு வாழ்ந்தாள். அவள் அண்ணன் வீரஸ் என்பான்; அவளைப் போன்றே போகத்திலே புரண்டு கிடந்தான். தங்கை செய்வதைத் தகுதியே என்று அண்ணன் உரைப்பான். அண்ணனின் ஆட்டத்தை ஆமோதிப்பாள் தங்கை, இருவரும் இருக்கும் நிலைபற்றி ஊரும் நாடும் உறுமும்; மன்னன்

சோகிப்பான்! மன்னனோ மாசற்றவன். கசடறக் கற்றவன். பெருங்குணத்தான்! தனது நாயகியின் நாற்றச் செயல்கள் நாட்டாரால் தூற்றப்படுவது கேட்டுத் துயருற்றான். வேறேதும் செய்ய அவன் மனம் இடந்தரவில்லை. கெம்பீரமான மன்னன் அண்டோனினஸ், தன் மனைவியின் முறைகெட்ட நடத்தைகளைக் கேட்டு முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு வாழ்ந்தான். அவன் ஆட்சியைப் போற்றாதாரில்லை. அவன் மனைவியின் ஆபாசத்தை ஏளனம் செய்யாதாருமில்லை. அரசன் கருணை உள்ளத்தான். அரசி காமவெள்ளத்திலே ஓர் தோணி! மன்னன் மக்களை மகிழ்விப்பதே கடமை என்று கொண்டவன். அவள் பருவத்திலே பற்பல சுகம் பெற்று பூரிப்போடு வாழ்வதே முறை என்று கண்டவள்! ஆட்சிக் கவலை அவனை யோசனையில் ஆழ்த்தும்; அவள் அன்று கண்ட சுகத்தை எண்ணி அகமகிழ்ந்து இன்று என்ன விருந்து கிடைக்குமோ என்று எண்ணி வாழ்ந்தாள்.

"வரியைக் குறை! வாய்க்காலைப் பெருக்கு! காட்டைத் திருத்து, கழனியாக்கு, நாட்டாரின் நலனைக் கவனி" என்று மன்னன் பிரதானியருக்குக் கட்டளை பிறப்பிக்க, அந்தபுரத்திலே அரசி சேடியர்களை "மாலைகள் தொடுத்து வா! மாடியிலே விளக்கேற்று, மதுக்கிண்ணங்களை ஒழுங்குற அடுக்காக வை. மை தீட்டுபவளை அழைத்து வா. மலர்ச்சோலையிலே யாரார் உள்ளனர் என்று பார்த்துவா. விருந்துக்கு ஏற்பாடுசெய். நடன சுந்தரிகளைக் கூப்பிடு. கீதங்களை துவங்கச் செய்" என்று கட்டளையிட்டுக் களிப்பாள்! சோக உலகிலே மன்னன் சிருங்கார உலகிலே அவள்!

பாஸ்டினாவின் இளமையும் எழிலும், ரோம் நாட்டுக் காமந்தகாரப் பொருளாயின; மன்னனின் மனவேதனைக்குக் கணைகளாயின; ஹேட்ரியனை மணாளனாகப் பெற்ற சாபினா சோகித்துச் சுகமிழந்து செத்தாள். பாஸ்டினாவை மணம் செய்துகொண்ட மன்னனோ அவளால் அவமானபுரிக்கு அரசனானான்! பாஸ்டினா மன்னனின் வாழ்க்கைக்கே ஓர் களங்கமாக விளங்கிவந்தாள். பாஸ்டினாவின் இளமை முதலே பட்டத்தரசியாவதற்கு முன்பிருந்தே அவளுக்கு சொகுசாக வாழ்வதிலும், சிரித்து குலுக்கி சிங்காரியாக இருப்பதிலும், செந்தேன் பருகிடும் வண்டுபோல ரீங்காரமிட்டு வாழ்வதிலும், தாராளமாக உலவி, சலிக்குமளவு குலவிடுவதிலுமே வேட்கை! சுபாவத்துடன் இளமையின் விறுவிறுப்பும், அந்தஸ்து தந்த வசதிகளும் சேரவே அவளது ஆனந்த கீதம் பரவசமாக, தாளம் பொருந்திய சங்கீதமாக அவளுக்கு இருந்தது. முதிர்ந்த வயதும், முற்றிய அறிவும், தணிந்த உணர்ச்சியும் பெற்ற

மன்னன். அவளுக்கு எவ்விதத்திலும் ஜோடியல்ல! எனவே, அவள் அவனை மணாளனாகக் கொண்டதால் மகிழ்வேதும் கொண்டாளில்லை. கண்ணுக்கும் கருத்துக்கும் இனியவனைக் கண்டுபிடிக்கும் பரீட்சையிலே பாஸ்டினா காலந்தள்ளி வந்தாள். அது விஷப் பரீட்சையன்றோ! சிரித்துக்கொண்டே வாழ்ந்துவந்த சிங்காரி. தனது 37-ஆம் வயதில் மாண்டாள். மன்னன் அவள் மரணமுற்றது கண்டு, மதி கெட்டவள் என்றாலும் நம் மனைவி என்று சோகித்தான். பாஸ்டினாவின் மகளை அன்போடு வளர்த்து வந்தான். தனக்குப் பிறகு பட்டத்தரசனாக வேண்டி, மார்க்கஸ் அரீலியஸ் என்ற இளைஞனை ஏற்பாடு செய்திருந்தான். அந்த மார்க்கஸ் அரீலியசுக்குத் தன் மகளைத் தந்தான். மகளோ மாதாவை நல்லவளாக்கிவிட்டாள்.



## சூறையாடினாள்

எ ஜமானன்:- அடே முட்டாளே! வா, இங்கே எங்கே என் மனைவி?

வேலைக்காரன்:- கடற்கரைக்குப் போனாங்க, எஜமான்.

எஜ:- ஏன்?

வே:- நிலாக்காலம் பாருங்கோ! அதனாலே சும்மா தமாஷாகப் போனாங்க,

எஜ:- துணைக்கு யார்?

வே:- அவர்தானுங்க!

எஜ:- எவர்?

வே:- எப்பவும் கூட இருப்பாரே, அவர்.

எஜ:- என் மனைவியின் சோரநாயகனென்று ஊரிலே பேசிக்கொள்கிறார்களே, அவனா?

வே:- ஆமாங்க எஜமான்.

எஜ:- அவன் பெயர் என்ன?

வே:- டல்லஸ்

எஜ:- என்ன, என்ன?

வே:- டல்லஸ் என்று பெயர்.

எஜ:- புதிய பெயராய் இருக்கிறது. இன்னொரு தடவை சொல்லு.

வே:- டர்ட்டல்லஸ்!

கொட்டகை பூராவும் கைக்கொட்டுகின்றனர்; கூச்சல் சிரிப்பு சொல்லி முடியாது. முட்டாள் புருடன் காமிக், அவன் மனைவியின் சோரநாயகனைப்பற்றி புருடனுக்கும் வேலைக்காரனுக்கும் சம்பாஷணை நடக்கிறது. நாடக மேடையில், இந்தக் கேலி நாடகம் ஊரிலே நடக்கும் உண்மையான காம நாடகத்தை சுட்டிக் காட்டவே நடத்தப்படுகிறது. இது ஜனங்களுக்குத் தெரியும் எனவே அவர்கள், இந்தக் காட்சி நடிக்கப் படும்போது, கிண்டல் யாரைக் குறித்தது என்பதைத் தெரிந்து கொண்டு, சந்தோஷ ஆரவாரம் செய்கின்றனர்.

மன்னன் மார்க்கஸ் அரீலியஸ், அந்த நாடகத்தைக் காண்கிறான். மக்கள் ஆரவாரிப்பதையும் பார்க்கிறான். நாடகக்காரர் நையாண்டி

செய்வது, வேறுயாரையுமல்ல, மன்னனையேதான்!

மார்க்கஸ் அரீலியசின் மனைவி இளைய பாஸ்டினாவின் காமக் கூத்தைத்தான் நாடக மேடையில் கிண்டல் செய்கின்றனர். அவளுடைய கள்ளக் காதலன் பெயரே, டர்ட்டல்லஸ்! இந்த சம்பவத்தை நடிக்கும் போதும், மன்னன் துளியும் கோபியாது, விசனிக்காது, வேதனைப்படாது. கொட்டகையில் இருக்கிறார். மன்னனையே அங்கு முட்டாள் கணவனாகச் சித்தரித்துக் காட்டுகின்றனர். மன்னனோ, மனம் பதறாமல் அமர்ந்திருக்கிறார்; மாநிலம் இன்றும் போற்றும் மாவேதாந்தி மார்க்கஸ் அரீலியஸ்; அருளும் அன்பும், அறிவும் பொறுமையும், அடக்கமும் நிறைந்த பொக்கிஷம், மார்க்கஸ் அரீலியஸ்! மகானென்றும், மகரிஷி என்றும், முனிவரென்றும் உலகம் இந்த உத்தமனை இன்றும் போற்றுகிறது. இவன் மனைவியோ, நாடகமேடை நையாண்டி செய்யும் அளவுக்கு நாற்றமெடுத்துப்போன நடத்தைக்காரி! மூத்த பாஸ்டினாவின் வயிற்றிலுதித்த முத்து, இளைய பாஸ்டினா முகவெட்டும் முறுவலும், தாய்க்கு இருந்ததுபோன்றே மகளுக்கும், குணமோ குன்று மலையானது போன்றிருந்தது. தாய் உத்தமி பட்டத்துக்கு தகுதியாவாள். மகளின் நடத்தைகளைக் கவனித்தால், தாய் காமச்சேற்றிலே புரண்டாள்; மகளோ காம வெள்ளத்திலே நீந்தினாள்? மதி நிறைந்து மாசு அற்ற மக்களின் மனத்தைக் கொள்ளை கொண்டு செங்கோலோச்சி அறிவின் கடலாக விளங்கிய மார்க்கஸ் அரீலியசின் மனைவி சுந்தர ரூபர்களைச் சூறையாடி; சந்திர முகங்காட்டி சரசமாடி சந்ததமும் சதங்கை ஒலியே சங்கீதமெனக்கொண்டு ஊர் தூற்றினாலும் உலகு பழித்தாலும், உண்ட ருசியை மறவேன் என்று கூறி, ஆடவரை அணைத்தழிக்கும் அமளியிலே தன்னிகரின்றி விளங்கினாள்!

புன்சிரிப்பும், பந்துவராளிப் பார்வையும் மோகனப் பேச்சும் உடனிருக்க, இளைய பாஸ்டினா, தன் பார்வையில் பட்டவருள், பக்குவமானவரைப் பிடித்து, பக்கத்தில் இருத்தி, பயம் போக்கி, சந்தேகம் நீக்கி, "என் தேகம் உனக்கே சொந்தம்" என்று வாக்களித்து, காமத்தீயை அவர் உள்ளத்திலே மூட்டி, கட்டித் தழுவித் தகர்த்து விடுவாள்! அவளுக்கு நிரந்தர விருந்து டர்ட்டல்லஸ் என்பவன்! வேளைக்கோர் சிற்றுண்டியும் விதவிதமான பானங்களும் தேவை. எனவே போர் வீரர், பாராளுமன்றத்தினர், பாவாணர், நடிகர், உடற்பயிற்சிக் கூத்து உறைவோர் எனும் இன்னொரன்ன "ரகங்களில்" முதல்தரம் பொறுக்கி எடுத்துக் கொள்வாள். ரோம் ராணி பாஸ்டினா!

மார்க்கஸ் அரீலியஸ் சிறுவயது முதலே சாந்த குணசீலன் சதா புத்தகமும் கையுமாக இருப்பான். இளையபாஸ்டினா சிறுமியாக

இருக்கும்போதே இளநகைக்காரக் குட்டி கண்ணாடியும் கையுமாகவே காலந்தள்ளி வந்தாள்! உலகத்தையும் உள்ளத்தையும் உணரவும், தெரிந்து தெளியவும் மார்க்க விளக்கம் பெறவும், மாந்தர் இயல்பு அறியவும் நல்லோர் கூறின மொழிகளைக் கேட்டு நல்வழிப் பெறவும் நாட்டம் கொண்டு, நாளெல்லாம் படிப்பதிலும், படிப்போர் பக்கம் நின்று கேட்பதிலும், பொருள் உணர்வதிலும், ஞான அருள்தேடித் திரிவதிலும் காலங்கழித்தான். காவலனாக வர இருந்த காளை! கன்னியோ வயதும் வசீகரமும் வளர ஆசையும் வளரப்பெற்று, தாயின் தளுக்கிலே எது தவறு என்று கண்டுபிடிப்பதிலும் மாய மொழி பேசிடவும். மயக்கப் பார்வை செலுத்தவும் ஓயாது கற்றுவந்தாள்.

இளைய பாஸ்டினாவின் இயல்புக்கும் அவளை மனைவியாகக் கொண்ட கசடறக்கற்ற காவலனின் குணத்துக்கும் ஒரு துளியும் பொருந்தாது! இருளும் ஒளியும் எனலாம். மருளும் அருளும் போன்றிருந்தார் மனைவியும் கணவனும்! எனினும் அவர்கள் வாழ்விலே புயல் எழும்பவில்லை! மார்க்கஸ் அரீலியஸின் மனத்திலே புகையும் தோன்றவில்லை. நாடக மேடையும் கேலி செய்யும் அளவுக்குத் தன் மனைவியின் நடத்தை இருப்பதைக் கண்டும் மார்க்கஸ் அரீலியஸ் அது விஷயமாக மௌனமாகவே இருந்தான். முகமும் சுளியான்! மனைவியுடன் அன்பு காட்டுவதையும் குறையான்! அத்தகைய சாந்த குணமுடையோன் அம்மன்னன்!

மார்க்கஸ் அரீலியஸ் இளைய பாஸ்டினாவைக் கடிமணம் புரிந்துகொண்டு நாட்டுக்கு அரசனானதும் வீரஸ் என்பவனையும் தன்னுடன் மன்னனாக இருக்க இடமளித்தான். ரோம் சாம்ராஜ்யத்துக்கு இரு சக்கரவர்த்திகள் ஏற்பட்டனர்! இருவரில், மார்க்கஸ் அரீலியசின் மாண்புகளே மணி ஒளியென விளங்கின. மக்களின் நலனைத் தன் நலனெனக் கொண்டு ஆண்டான். அறிவின் மிக்கோன், உலக அறிவாளிகள் உரைத்த வேதாந்தங்கள் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்துவரும் வேளையிலே இளைய பாஸ்டினா, "நீண்ட கறுப்புச் சட்டைக்காரனடி! மன்னன் நெட்டுரு போட்டிடும் நேயனடி! கண்டனும் கடுக்காண்டி! அவன், காதும் வாயும் பொத்திக் கிடப்பாண்டி!' என்று சேடியரிடம் பாடினாளோ யாதோ நாமறியோம். ஆனால் மன்னவனைப்பற்றி அவள் எண்ணம் அதுவாகத்தான் இருந்திருக்கவேண்டும். ஏனெனில், அவள் ராணியானதும், தனது ரசமிக்க ரணகளத்தைவிட்டு அங்குலமும் நகரவில்லை! வெட்கம் பயம் விடுத்தாள்! ஊரார் உரையாடலை, வீணர் கூச்சலென்று ஒதுக்கித் தள்ளிவிட்டாள். "என் ஆனந்த வாழ்வை தடைசெய்ய யாருக்கும் உரிமை இல்லை" என்று கருதினாள். கனி

கிடைப்பது ரசம் பருக மலரிருப்பது மணம் நுகர. வாழ்க்கை இருப்பது இன்பக் கேணியில் குளிக்க என்ற இந்த சிருங்கார சித்தாந்தத்தில் இவள் தேறினாள். மார்க்கஸ் அரீலியஸ், மலை குலையினும் நிலை குலையாதிருத்தல் வேண்டும். மாநில மயக்கு விடவேண்டும். அவனடியார் எவரெனினும் போற்றல்வேண்டும். அடுத்துக் கெடுப்பாரையும் அழித்தல் கூடாது. அகந்தையும் அறியாமையும் அணுகவிடல் ஆகாது. சிந்தையில் சோகம் புகவிடலாகாது. பகைவரிடமும் பாசமே காட்ட முயலுதல் அறநெறியாகும்; பாதகம் நீக்குவதே பாயோரின் கடமையாகும்; அஞ்ஞானமகற்றி மெய்ஞ்ஞானம் விளைத்து, ஆனந்தம் தர அறிவைப் பெருக்கி, ஆசையைச் சுருக்கி வேதாந்த சித்தாந்த போதனைகளைக் கேட்டும் கூறியும், படித்தும் போதித்தும் இருந்து வந்தான்.

புத்தகமெடுக்கவே அறிவான் என்று கூறமுடியாது! போரிலும் புலியே, மன்னன். உடனாண்டவன் மாண்டபின்னர், உலகே புகழும் போரில், மார்க்கஸ் அரீலியஸ் ஈடுபட்டான். சிரியாவிலே சீறி எழுந்து ரோம் சாம்ராஜ்யத்தை சிதைக்க முனைந்த பார்த்தியன் எனும் இனத்தாரைக் கடும் போரிட்டு முறியடித்தான். போர்க்களத்திலே, கூடாரத்திலே சிறிதளவு ஓய்வு கிடைக்கும்போதும், வாளை உறையிலிட்டதும், மன்னன் ஏட்டை எடுத்துப் படிப்பான்; இன்றோ "என் எண்ணங்கள்" என்ற நூல் எழுதுவான்! இங்ஙனம் வாழ்ந்தான் வேந்தன். ரோம் சாம்ராஜ்யம் மார்க்கஸ் அரீலியஸைப் புகழ்ந்தது. தங்கக் குணமுடையோனுக்குத் தாபத்தணல் மிக்க தையல் பெண்டாக வாய்த்தாளே என்று மக்கள் மனம் வருந்தினர். மன்னன் அது குறித்துக் கவலையற்றிருப்பது கண்ட பிரதானியர் வெகுண்டனர். சிலர் மன்னனிடம் முறையிட்டுக் கொண்டனர். மன்னனோ மௌனமாக இருப்பான்; இல்லையே "நானறிவேன் நண்பர்களே!" என்று உரைப்பான், சுடாத நெருப்பு, சுழலாத கடல் இராது. அதுபோல், காமக் கருத்திகள், கள்ளக் காதலரைத் தேடி அலையாது இராது என்று மன்னன் கருதினன் போலும், பெரியோரின் மொழிகளிலே எவை சிறந்தன. ஞானிகளின் வழிகளிலே எவை காலத்துக்குகந்தன என்ற அறிவுத்துறை ஆராய்ச்சியிலே மன்னன் ஈடுபட்டிருந்தான்.

மோகமானைத் தாவிப் பிடித்த மாதோவெனில் ஆணழகரிலே, யார் நமது கண்ணையும் கருத்தையும் இழுத்திடும் இயல்பினர் என்று ஆராயும் இன்பத் துறையிலே இழிவையும் கருதாது ஈடுபட்டு வந்தாள். வெப்பம் தீர இளநீர் பருகுவான் ஒருவன். வெப்பமூட்டும் கள் குடிப்பான் மற்றொருவன்; ஈவான் ஒருவன்; களவாடுவான் இன்னொருவன்; மெய்யுரைப்பான் ஒருவன்; பொய்யே பேசுவான் மற்றொருவன்; உலகம்

இது. கனி குலுங்கும் தோட்டத்தின் பக்கத்திலோ, காலில் தைக்கும் முள் இருக்கும்! மார்க்கஸ் அரீலியஸ் வாழ்ந்த இடத்திலே, இளைய பாஸ்டினாவும் இருந்தாள்! கப்பலோட்டுபவரையும், களியாட்டக்காரரையும், உடற் கட்டுக் கொண்டோரையும், வரிசையாக வரச்செய்து, வள முள்ளவனைத் தேர்ந்தெடுப்பாளாம், ரோம் நாட்டு ராணி இளைய பாஸ்டினா! அலைபோல் மோதும் ஆசையை அடக்க அலைகடலை அடக்கும் மரக்கலம் செலுத்துவோரைத் தேடினள் போலும்! மார்க்கஸ் அரீலியசின் புகழும், செல்வாக்கும் படைகளின் போர்த்திறனும், பிரதானியரின் பக்கபலமும் ரோம் சாம்ராஜ்யத்துக்கு அது சமயம், இரு முறை ஏற்பட்ட ஆபத்தைத் தடுத்தன. காசியஸ் என்ற படைத் தலைவன் மார்க்கஸ் அரீலியஸின்மீது போரிடத் துணிந்து, துரோகியாகி புரட்சிக் கொடியைப் பறக்கவிட்டான். நாடே சீறி எழுந்தது. காசியஸின் தலை தரையில் உருண்டோடியது. மன்னன் அவன் மனைவியையும் மக்களையும் மன்னித்துப் போஷித்தான் அருள் நெறியால் அனைவரையும் மன்னன் மகிழ்வித்தான்.

அவள் காமவெறியால் காட்டிலே புலி இரத்த மோப்பம் பிடித்து அலைவதுபோல் உழன்றாள். மன்னன் ஆசியாப்பகுதி சென்றுவரப் புறப்பட்டபோது, அவளும் உடன் சென்றாள். அந்தக் கண்டத்து இரையின் ருசி காணவோ! ஏதோ நாமறியோம் வழியிலே மாண்டாள். மன்னன் அவள் சாவுக்காக சஞ்சலமடைந்தான்; அவளுக்கு இறுதி மரியாதைகளும் செய்தான் தாரமிழந்த மன்னவனைத் தன் வலையில் வீழ்த்தக் கருதினாள் வேறொருத்தி. அவள் மன்னனோடிருந்து ஆண்டு மாண்ட வீரஸ் என்பானின் தங்கை பேமியா என்பவள், அவளது கணைகள் கூர்மழுங்கிக் கீழே வீழ்ந்தன! மன்னன் மக்கள் மகிழ ஆட்சி செய்து பின்னர் அவர்களை விட்டுப் பிரிந்தான்; இறந்தான்



# போகப் பூனை

"தே வி! அந்தத் தங்கத் தட்டுகளை எடுக்கட்டுமா? வைரம் இழைத்த வட்டிகள் வேண்டாமா? முத்து மாலையை அணிந்து கொள்ளவில்லையா? முகத்திலே ஏனம்மா சோகம்?"

"வேலையைப் பாரடி! வீண் விளையாட்டு வேண்டாம். எரிகிற நெருப்பிலே எண்ணெயை ஊற்றுகிறாள், இவளொரு தொல்லை!"

"இது என்னம்மா இவ்வளவு சலிப்பு? கரும்பு தின்னக் கூலி கேட்பார்களோ! ரோம் சாம்ராஜ்ய சக்கரவர்த்தியின் பட்டமகிஷியாகப் போகிறீர்கள். என்னமோ, முட்பீப்பாயிலே உருளப்போவதுபோல முகத்தைச் சுளித்துக் கொள்வதும், பெருமூச்செறிவதும், பேச்சிலே கனல் கலப்பதுமாக இருக்கிறீர்கள்!"

"கரும்பு தின்னப்போகிறேனா? அடி, கதிபோதியே! எனக்கு நடக்கப்போவது கல்யாணமாம்! நான் களிப்படையை வேண்டுமாம்! கண்ணில்லையா! உனக்குக் கருத்து இல்லையா! பெண்ணில்லையா நீ! புத்தி கிடையாதா? பேசாமல் உன் வேலையைப்பார்"

"சகசமான சலிப்புத்தானம்மா அது, கல்யாணம் என்ற உடனே முதலிலே பெண்கள் இப்படித்தான் சலித்துக் கொள்வார்கள். கூச்சமிருக்காதா! பிறகு பார். அவர்கள் அடையும் ஆனந்தத்தை!"

"ஆனந்தம்! எனக்கா? ஏண்டி தோழி! அந்தக் கிழட்டுக் காமுகனிடம், நான் ஆனந்தமா பெறப் போகிறேன்? கனவு காண்கிறாய்."

"முப்பத்தைந்து வயதுதானே அவருக்கு - அவர் கிழவரா?"

"நான் பதினேழு வயது தெரியுமா? இந்த ரோம் சாம்ராஜ்யத்தின் கிளிபோல் வளர்ந்தேன்; இனி அந்தப் போகப் பூனைக்கு இரையாகப் போகிறேன், இதுவே என் வாழ்வு"

"பார்த்திபன் மன்னரை முறியடித்த தீரன்! பாரோர் மெச்சிடும் வீரன்! ஊரெங்கும் புகழ்பெற்ற உதாரன்! மங்கையர் மனமகிழும் அலங்காரன்! மார்க்கஸ் அரீலியசின் தோழன்! வீராதி வீரன் வீரஸ் உன்னைத் திருமணம் செய்துகொள்ளப் போகிறார். உனக்கு என் விசாரம்? ஆகா உனக்குக் கிடைத்துள்ள பாக்கியம் தமக்குக் கிடைக்கவில்லையே என்று ஏங்கும் நங்கையர் எத்தனையோ அரண்மனைகளில் இருக்கின்றனர். மகான் மார்க்கஸ் அரீலியசின் மகளே! உமது மனத்திலே வீணான விசாரம் கொள்ளாதே. உன்னை மாலையிடப் போகும் மாவீரன், மதுவையும் மங்கையையும் இனி மறப்பான். உன்னைக் கண்டபிறகு பிரியான். உன் அழகொளி அவனது கண்களைத் திறக்கச் செய்யும்.

இப்போது ஏதோ ஆடிப்பாடிக் காலங்கழிக்கிறான் என்ற போதிலும் உனது மதிமுகத்தைக் கண்டதும்' அவன் நீயே கதியென்று கூறி உன்னிடம் தஞ்சமடைவான்."

"தஞ்சமடைவானாம்! குடியும் கூத்தியும் புடை சூழ வீற்றிருக்கும் கோணல் சேட்டைக்காரன். என்னை ஒரு விளையாட்டு பொம்மை என்று கொள்வானே யன்றி, மதியான் அரண்மனைக்குள் நுழைய அவனுக்கோர் அனுமதிச்சீட்டு நான்? அவ்வளவே!"

"ஆயாசம் வேண்டாம், அரசகுமாரி அலங்காரங்கள் முடித்துக் கொள். மன்னன் பிரயாணத்துக்குச் சித்தமாகி விட்டான். கொடி கட்டிய தேர் மாளிகை வாயிலியே தயாரா நிற்கிறது. காற்றுடன் போட்டியிடும் புரவிகள், காளைத் தட்டுகின்றன. காவலரின் முரசு கேள்! புறப்படு புறப்படு! திருமணம் முடிந்ததும் உனது சந்தேகமும் சஞ்சலமும் பகலோன் முன் பனிபோல் பறக்கும்."

ரோம் சக்கரவர்த்தியின் சிங்கார மாளிகையின் அந்தப்புரத்திலே, மார்க்கஸ் அரீலியஸின் மகள், லூசில்லாவுக்கும் அவளது சேடிக்கும் இந்தச் சம்பாஷணை நடக்கிறது. மார்க்கஸ் அரீலியசுடனிருந்து ஆட்சி புரியும் வீரஸ் என்பவனுக்கு லூசில்லாவை மணம் செய்து கொடுக்க மன்னன் தீர்மானித்தான், வீரஸ் அதுபோது ஆண்டியாக நகரிலே பார்த்தியன் எனும் இனத்தவரை அடக்க, பெரும்படையுடன் ரோம் நகரைவிட்டுப் புறப்பட்ட வீரஸ் இரணகளத்துக்குப் படைகளை அனுப்பிவிட்டு, ரமணிகள் களத்திலே தன் முழுத்திறனையும் காட்டிப் போர் புரிந்து கொண்டிருந்தான், ரோம் சாம்ராஜ்ய கீர்த்தியை நிலை நாட்ட, வீரர்கள் வேலும் வாளும் கொண்டு வெஞ்சமர் புரிந்து நிற்க, வீரஸ் விடியமட்டும் விதவிதமான கேளிக்கையில் மூழ்கிக் கிடந்தான். போர்களத்திலே இருதயத்திலே ஈட்டி பாய்வதால், "ஆ! ஐயோ!" என்று வேதனைக் குரல் கிளம்பிக் கொண்டிருந்தது, அந்தப்படைகளை ஏவிய மன்னனின் கூடாரத்திலோ, கோமளவல்லிகளின் கீதம், குடிவெறிக் குளரல், காமச் சேட்டைச் சத்தம் கிளம்பியபடி இருந்தது.

போர்க் களத்திலே, மண்ணிலே இரத்தம் புரண்டோடிற்று! மன்னன் கூடாரத்திலே மங்கையர் மடியிலே மதுக்கிண்ணங்கள் உருண்டதால், அவர் தம் ஆடை நனைந்தது! உயிரிழந்தவர்கள் உருண்டு கிடந்தனர் களத்திலே! வீரசின் வெஞ்சமர்க் களத்திலே, போதை தாங்காது பல பூவையர் புரண்டு கிடந்தனர்! பிடி! அடி! விடாதே, என்று ரோம் சாம்ராஜ்ய கீர்த்தியைத் தாங்கள் வாள் முனையினால் தீட்ட முனைந்த வீரர்கள் அங்குக் கூவினர். "ஆடு! பாடு! போடு! என்ற ஆனந்த அமளியே காமக் காட்டிலே பேசப்பட்டன. "மன்னன் வாழ்க! மாற்றார்

ஒழிக! ரோம் வாழ்க!" என்று ஆரவாரித்தனர் ரோம் சாம்ராஜ்யப் படையினர்! "மது வாழ்க! மங்கையர் வாழ்க! மதுரகீதம் வாழ்க!" என்று ஆலாபனம் செய்தான் மன்னன்.

வீரஸ் வீணாட்டம் ஆடிக்கொண்டிருக்கையிலே ரோம் வீரர்கள் போரிட்டு; பார்த்தியன் இனத்தவரை முறியடித்து ரோம் சாம்ராஜ்ய கீர்த்தியை நிலைநாட்டினர். போர் முடிந்ததே யொழிய, வீரசின் களியாட்டம் முடிந்தபாடில்லை, ஆண்டியாக் நகரிலே ஆனந்தமாக ஆடிக்கிடந்தான்.

மார்க்கஸ் ஆரீலியஸின் மனம் புண்பட்டது. வீரசின் செயல்பற்றி மக்கள் கேலி செய்வது கண்டு மனம் வெதும்பினான். வீரஸ்சின் சேட்டைக்குக் காரணம், அவன் மணம் செய்து கொள்ளாதிருப்பதே என்று எண்ணித் தன் மகள் லூசில்லாவை அவனுக்குத் திருமணம் செய்விக்கத் தீர்மானித்து, மகளை அழைத்துக்கொண்டு நேராகவே ஆண்டியாக் நகர் போகப் புறப்பட்டான், புள்ளிமான் துள்ளி விளையாடுவது போன்றிருந்த மன்னன் மகளை, புலிபோல் காமக் காட்டிலே திரிந்துக் கொண்டிருந்தவனுக்கு மனைவியாக்க மன்னன் தீர்மானித்தது, பொருத்தமாமோ!

லூசில்லாவுக்கு மனத்திலே சோகம் மேலிட்டது. மன்னனின் கட்டளையையோ மீறமுடியாது. தோழியர் அலங்காரம் செய்துக் கொள்ளத் தூண்டினர். லூசில்லாவுக்கோ அது பிடிக்கவில்லை. அரை மனத்துடன் புறப்பட்டாள். ஆண்டியாக் நகர் நோக்கிப் பரி வாரத்துடன் மன்னனும் அவன் மகளும் சென்றனர். குறும்புக்காரர்கள் சிலர், "வீரஸ் வெற்றி விழாக் கொண்டாடுவதைத் தடுத்து, அந்தப் பெருமையைத் தான் பெறவே மார்க்கஸ் அரீலியஸ் சூது செய்கிறான்" என்று பேசவே பாதிவழி சென்ற மன்னன் மகளை மட்டும் பரிவாரத்துடன் ஆண்டியாக் நகருக்கு அனுப்பிவிட்டு, ரோம் திரும்பிவிட்டான்.

ஆண்டியாக் நகரில் வீரஸ் போகத்திலே புரண்டு கொண்டிருக் கையிலே, மன்னன் மகள் தன்னை மாலையிட வருவதாகத் தூதர் கூறக்கேட்டு, "இது ஏன் புதுத்தொல்லை!" என்று சலித் துக்கொண்டு "ஆண்டியாக் நகருக்கு அவள் வருவதற்குள், நானே செல்கிறேன்" என்று கூற, எபீசஸ் நகருக்குச் சென்று, அங்கு திருமணத்தை முடித்துக் கொண்டான். திருமணம் முடித்துக் கொண்டதும், பழைய நடவடிக்கையை மறக்கவில்லை. குலுக்கு நடைக் கோமளவல்லிகளுடன், கொஞ்சியும் மதுக் குடத்தை முத்தமிட்டும் மலரணைமீது புரண்டுகொண்டுமிருந்தவனுக்குப் பதினேழு வயதுப் பாவை ஓர் பூங்கொடிபோல் தோன்றினாள். "இவள் ஓர் விளையாட்டு

பொம்மை! சரசக்காரியாகாள்" என்று கருதினான், லூசில்லா அழகற்றவளவல்ல! பொன் மேனியாள்! மலர்முகம்! மதுர மொழிக்காரி! அவளை அவன் சிறுமி என்று கருதினான். அவனை அவள் கிழட்டுக் காமுகன் என்று கருதினாள். இருவரும் மனமொத்து வாழ வேண்டுமென்று எண்ணினர். மன்னன் தனது கடமை தீர்ந்துவிட்டதென்று கருதி, வேதாந்தம் படிக்கும் வேலையிலே மும்முரமாக ஈடுபட்டான்.

ஆண்டியாக் நகரிலே, வீரஸ் வினோதக் களியாட்டத்திலே மூழ்கினான். லூசில்லா மனம் புழுங்கி வாழ்ந்து வந்தாள். ஒருவரை ஒருவர் வெறுத்தனர். லூசில்லாவை மணம் செய்து கொண்டதால் ரோம் சாம்ராஜ்யாதிபதி என்ற பட்டம் நிலைத்தது. மார்க்கஸ் அரீலியசின் மனம் மகிழ்ந்தது. அது போதும் என்று வீரஸ் தீர்மானித்தான். நறுமணம் கமழும் மலர்போல் விளங்கிய லூசில்லா, தனது இன்ப வாழ்வு, வீரஸ் எனும் நச்சரவால் நாசமாகுமோ என்று அஞ்சி ஆயாசமுற்றாள்.

வீரஸ் ரோம் திரும்ப நேரிட்டது. ரோம் என்ற உடனே லூசில்லாவிற்குக் குதூகலம் பிறந்தது. "இந்த ஆண்டியாக்கிலே அவதிப்படுவதை விட்டு, ரோம் நகர் சென்றால், பழைய தோழியர் களைக் காணலாம்" என்று கருதினாள். ரோம் வந்து சேர்ந்தனர் இருவரும். வீரஸ் வழக்கப்படி குடி கூத்தியைத் தழுவினான். லூசில்லாவின் அழகொளி ஆணழகனருகிலே வீசிற்று! அவள் பரப்பிய மணம் காதலரை இழுத்தது. அவளது புன்சிரிப்பெனும் பாணம், காளைகளின் உள்ளத்தைத் தாக்கிற்று, லூசில்லா மனதுக்கிசைந்த மணாளன் யார் என்று கண்டுபிடிக்க, உல்லாச உலகிலே நுழைந்தாள், "இன்பமாக வாழ இவருக்குள் உரிமை எனக்குக் கிடையாதா? என்னை அவருக்குப் பிடிக்கவில்லை; எனக்கோ அவர் வேம்பு! அவர் உலகு வேறு, என் உலகை நான் சிருஷ்டிப்பேன். நான் அழகும் இளமையும் ததும்பும் பொற்குடம்! யார் விரும்பார் என்னை?" என்று எண்ணினாள். இங்குமங்கும் கண்களைச் செலுத்தினாள். இளையோரை வாட்டினாள். பலர் உள்ளத்திலே விரகதாபத்தை மூட்டினாள். வீரஸ் இறந்தான்.

லூசில்லா விதவைக் கோலத்தை அதிக நாட்கள் விட்டு வைத்தானில்லை மன்னன். இரண்டாம் புருடனைத் தேடிப் பிடித்தான். அவன் மன்னன் மனதுக்குப் பிடித்தமானவன், கல்விமான்; ஆழ்ந்த கருத்தும் நற்குணமும் பொருந்தியவன்; வயதானவன்! வீணாட்ட மாடுபவனல்ல. விவேகி, முகமே சோக பிம்பம்! அத்தகைய பாப்பியானஸ் லூசில்லாவை மணந்து கொண்டான். இந்த ஜோடியும் துளியும் பொருத்தமானதல்ல. முன்பு இருந்ததைவிட லூசில்லா உலக

விவகாரங்களை நன்கு தெரிந்து கொண்டாள். எனவே சோகமுக புருடன் வருவதைப்பற்றி அவள் வருந்தினாளில்லை. காதலர் கூட்டம் களிப்பூட்டக் காத்துக் கொண்டிருந்தது. லூசில்லாவைச் சுற்றித் திரிந்து கொண்டிருந்தவர்களிலே இளையோனும், அழகனும் சீமானுமான க்வாராட்ஸ் என்பான் லூசில்லாவை வென்றான்! அவர்களின் ஆனந்த வாழ்வு ரோம் நகரமெங்கும் தெரிந்துவிட்டது! தெரிந்தால் என்ன?

இதற்குள் லூசில்லாவிற்கு மற்றோர் தொல்லை வந்தது; அதனைத் தீர்த்துக்கொள்ள அவள் அனுஷ்டித்த முறை, ரோம் மக்களின் மனத்தைத் திடுக்கிடச் செய்துவிட்டது.

லூசில்லாவுக்கோ அண்ணன், பெயர் கமோடஸ், கமோடஸின் மனைவி கிரிஸ்பினா, தர்பாரிலே கிரிஸ்பினாவுக்கே சகல மரியாதையும் செய்தனர். காரணம், சுமோடஸ் களிப்புற வேண்டுமென்பதற்காகவே, கமோடசே பட்டத்திற்குரிய இளவல்! எனவே அவனது காதலிக்கே மரியாதை கிடைத்தது. இது கண்ட லூசில்லா பொறாமை கொண்டாள்; யோசித்தாள். கமோடசின் காதலிக்குத்தானே மரியாதை கிடைக்கிறது. சரி நானே அந்தக் காதலியாகிவிட்டால், தர்பாரிலே எனக்கு மரியாதை செய்யாது போவார்களா?" என்று எண்ணினாள். அண்ணனாயிற்றே என்று தயங்கவில்லை. அவன் மேல் விழுந்து கொஞ்சினாள். அவனும் தங்கையின் தங்க தேகத்தைத் தடவிக் கொடுத்தான். அக்ரமமான காரியம் நடக்கலாயிற்று.

இதற்குப் பிறகும் லூசில்லாவின் மனம் நிம்மதியடைய வில்லை. கமோடஸ் செத்து, கிரிஸ்பினாவின் கர்வம் அடக்கப்பட வேண்டும் என்று தீர்மானித்துத் தன் காதலரிடம் முறையிட்டாள். அவன் பணத்தை வாரி வீசினான்; கொலையாளி கிடைத்தான். அவனோ மார்க்கஸ் அரீலியஸ் நாடகச் சாலைக்குப் போகும் வழியிலே கட்டாரி கொண்டு மிரட்ட, கொலையாளியை மன்னனின் வேலையாட்கள் பிடித்துக் கொண்டனர்.

இந்த விஷயம் நகரமெங்கும் பரவவே, லூசில்லாமீது வெகுண்டனர் மக்கள். லூசில்லா காப்ரே தீவுக்குத் துரத்தப்பட்டாள்; அங்குக் கொல்லப்பட்டாள்.

"வந்துவிட்டீர்களா! எதிர்பார்த்தேன். ஏன் தாமதம்? விரைவாக முடித்துவிடுங்கள் காரியத்தை. உயிரை இழக்க வேண்டி நேரிடும் என்பதை நான் அறிவேன். கமோடஸ் கையிலே உள்ள கொடுங்கோல் என் போன்றோரின் உயிர் குடிக்கும் வாள் என்பதை நான் அறியேனா, காவலரே எடுங்கள் கத்தியை; வீசுங்கள்; உருளட்டும் என் தலை, நொடியிலே முடியுங்கள்" என்ற நடுக்கமில்லாக் குரலில் பெரிடினாகஸ்

பேசினான். அவன் விடுதிக்கு வந்திருந்த லெயிடஸ் இந்த மொழி கேட்டுத் திகைத்து நின்றான். உயிரை இப்படித் திரணமாக மதிக்கும் பேர்வழி உண்டா என்று அவர்கள் யோசிக்கவில்லை. படுக்கையை விட்டு எழுந்திராமல், பதைக்காமல், என் உயிரைப் போக்கத்தானே வந்தீர்கள்? காரியத்தைச் சீக்கிரம் முடியுங்கள்" என்று கூறும் தீரவான் இவன்போல் வேறு யாருமிருக்க முடியாதே என்றெண்ணிவிடவில்லை, "இதென்னடா வம்பு! நாம் வந்தது எதற்கு? இவன் எண்ணிக் கொண்டது என்ன?" என்பதை எண்ணியே திகைத்தனர். உண்மையில் பெர்னாக்ஸிடம் வந்தவர்கள் அவன் உயிரைப் போக்கவில்லை. அவர்கள் அவனுக்கு முடி தர வந்தனர். அவனோ தன் தலை உருளப்போகிறதென்று எண்ணினான்! அரசனாக வாரீர் என்று பெர்டினாக்ஸை அழைக்க அவர்கள் வந்தனர். அவனோ தன்னைக் கொல்ல அவர்கள் வந்ததாக எண்ணினான்.

"ஐயா! உம்மைக் கொல்லவல்ல நாங்கள் வந்தது. ரோம் சாம்ராஜ்ய சக்கரவர்த்தியாக்கப் போகிறோம். மணிமுடியைத் தரப்போகிறோம். அதை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்றனர் வந்தவர்.

சாய்ந்திருந்த பெர்னாடிக்ஸ், "இந்த துர்பாக்கியனிடம் இந்தக் கேலியும் கிண்டலும்? எனக்கு அரசு! ஏன் இந்த வம்பு?" என்றான்.

"விஷயத்தை விளக்குவோம். கேளும் ரோம் நாட்டை இதுவரை ஆண்டுவந்த கமோடஸ் மாண்டொழிந்தான். மக்கள் மனக்குறை ஒழிந்தது. ரோம் ஒரு அநீதிக்காரனை ஒழித்துவிட்டது. அரசு உம்மிடம் வருகிறது. இது உண்மை என்று கூறி சுமோடஸ் கொல்லப்பட்டதைக் கூறினர்.

சுமோடஸ் பட்டத்துக்கு வந்ததும் பதட்டமே பட்டம்மாக்கி, மற்றவரை மிரட்டி அதட்டி கேளிக்கைகளிலே மூழ்கிக் கிடந்தான். அவன் தன் மனைவி கிரிஸ்பினாவைக் கைவிட்டு மனோஹரியும் மயக்குவதிலே வல்லவளுமான ஜாலக்காரி மார்ஷியாவுடன் குஷாலாக வாழ்ந்து வந்தான். அவனது கொடுமைக்குப் பலியானவர்கள். பலர். மார்ஷியாவின் முகமலர்ச்சி யாருக்கு கிடைக்கிறதோ அவர்களின் குடும்பம் மலரும், மற்ற இடங்கள் கருகும். அவள் ஆதரித்தால் வாழ்வு, இல்லையேல் வீழ்ச்சி! இந்த அளவிலே இருந்தது அரசு, மன்னன் கமோடஸ் இறுதியில் மார்ஷியாவிடமே தன் கொடுமையைக் காட்டத் தொடங்கினான். மார்ஷியா தன் வசீகரம் மங்குவது கண்டாள்; மனம் மருண்டாள். மன்னனின் கோபம் மார்ஷியாவுக்குத் திகிலை உண்டாக்கிற்று. மன்னன் உயிரோடு இருக்கும்வரை உயிருக்கு ஆபத்து வரும் என்பதை உணர்ந்தாள். எனவே மன்னனைக் கொல்லத்

தீர்மானித்து விட்டாள். விஷங்கலந்த ஒரு கோப்பை திராட்சை ரசம்! கமோடஸ் மாண்டான்! அந்தக் கொலைச் செயலுக்கு உடந்தையாயிருந்த லெயிடஸ், பெர்ட்டினாக்ஸை மன்னனாக்கவே அங்கு வந்திருந்தான். கமோடசுக்கு நேரிட்ட கதியைத் தெரிந்து கொள்ளாததாலேயே பெர்டினாக்ஸ், வந்தவர்கள் கொல்வார்கள் என்று எண்ணினான். பின்னர் விஷயம் தெரிந்தது.

பெர்ட்டினாக்ஸ் மன்னனானான்; மக்களைத் தன் செங்கோலால் மகிழ்வித்தான். ஆனால் அவனுக்கு மனைவியாக இருந்தவளோ! அவள் பெயர் டைடியானா; செல்வக் குடியில் பிறந்தவள்; சிங்காரி; ஆனால் சீல மற்றவள், அவளுடைய மனம் மோகனன் ஒருவனிடம் லயித்தது, அவளுடைய மனமாகிய வீணைக்கு சல்லாபம் எனும் நரம்புகளை அமைத்து, அந்த இசைவாணன் மீட்டினான். அந்தக் கீதம் ரோம் நகரெங்கும் கேட்டது. அவன் ஊட்டிய மோகத்தை உண்டு டைடியானா ஆடினாள், அரசன் தன் புருஷன், ஆனாலும் என்ன? அந்த இசைவாணன் பாடிடும் கீதம் எத்தனையோ சாம்ராஜ்யங் களுக்குச் சமமாக அவளுக்குத் தோன்றிற்று. அவனுடன். சரசமாடுவது வெளிப்பட்டுவிட்டால் என்ன நேரிடுமோ என்ற கவலையும் கொண்டாளில்லை. தனது சுகானுபவத்தை மற்றையோர் தெரிந்து கொள்ளாமல் ஏதோ பேசினால் அதைக் காதுகொடுத்துக் கேட்பானேன் என்று எண்ணினாள்.

டைடியானா இந்த நிலையிலே, நெடுநாட்கள் வாழ முடியவில்லை. எந்த லெயிடஸ், முடியைக் காணிக்கையாக பெர்ட்டினாக்குத் தந்தானோ, அதே லெயிடஸ் மன்னன்மீது துவஜம் தொடுத்தான். அரண்மனையிலே குழப்பம்! போர் வீரர்கள் சிலர் புரட்சி செய்தனர்; பெர்டினாக்சைக் கொன்றனர். அந்தப் பிணத்தை எடுத்துப் புதைக்கவும் படையினருக்கு நேரமில்லை. ரோம் நாட்டை ஏலங்கூறி விற்கலாயினர்.

ஆம்! இரண்டு கண்டங்களிலே வெற்றி பல கண்ட வீரர்கள் சித்தரித்த ரோம். ஜூலியஸ் சீசரின் கோட்டம் அஞ்சா நெஞ்சர்களுக்குக் கொஞ்சிடும் பூஞ்சோலையாக இருந்த ரோம் ஏலத்துக்கு விடப்பட்டது! மன்னனைக் கொன்று ஒரு புறத்திலே கிடத்திய பின்னர், அந்தப் புரட்சிப் படையினர் மேற்கொண்டு என்ன செய்வது, இனி எவரை மன்னனாகக் கொள்வது என்று யோசித்தனர். அபூர்வ முடிவு செய்தனர். ரோம் ராஜ்யத்தை விலைக்கு விற்பது என்று கிளம்பினர். அரண்மனை மதிற்சுவரிலே ஏறி நின்றான் ஒரு போர் வீரன், உரத்த குரலிலே கூவினான். "ரோம் விலைக்கு தரப்படும் ஏலங்கூறப்படும்! தேவையானவர்கள். என்ன தொகைதரமுடியு மென்பதைக் கூறிடுக! வருக! விலை கூறுக! ரோம் விற்பனைக்குத் தயார்' என்று.

ஆஹா! ஈஜிப்டிலே வெற்றி, சிரியாவிலே ஜெயக்கொடி, பிரிட்டனிலே வெற்றி என்று அந்த அரண்மனையிலேயிருந்து வெற்றி முரசு கேட்டதுண்டு! அந்த மன்னன் பணிந்தான், இன்ன அரசன் களத்திலே வீழ்த்தப்பட்டான் என்று பரணி பாடப்பட்ட இடம் அந்த அரண்மனை. அங்கு ஒரு போர் வீரன், ரோம் சாம்ராஜ்யமே விலைக்கு விற்கப்படும் என்று கூவினான்! விற்றான்!! அதிக விலை கொடுத்து ரோம் சாம்ராஜ்யத்தை வாங்கியவன் பெயர் ஜூலியானஸ்.

ஜூலியானஸ், அன்று விருந்துண்டு கொண்டிருந்த தன் மாளிகையிலே, அங்கு அரண்மனையிலே நடந்த அமளியும், மன்னன் மாண்டதும், ரோம் விலைக்கு விற்கப்படுவதுமான செய்தி எட்டிற்று. அவனுக்கு இந்தச் செய்தி சுவை தரவில்லை. ஆனால் அந்தச் செய்தியைக் கேட்டதும் அவன் மனைவி மணிலா தன்னை மறந்தாள். மனம் துள்ளி விளையாடலாயிற்று; ஆனந்த அபின் உட்கொண்டவள் போலாயினாள். அவள் மனக்கண் முன்பு அந்தப்புரம் சேடியார் முதலியன தாண்டவமாடின.

"ஆசை கொண்டவனே, அரசாளத்தானே, ஆருயிர்க் காதலனே!" என்று அவள் கண்கள் கூறின.

"ஆபத்து அல்லவோ, அதிகாரம் கொள்ளவோ, அழிந்தவரை அறியாயோ!" என்று எச்சரித்தன ஜூலியானசின் கண்கள். மணிலா தூபமிட்டாள்; மகள் கிளாரா அர்ச்சித்தாள். உடனிருந்தவர்கள் நயவஞ்சகத்தை நைவேத்தியமிட்டனர். ஜூலியானசுக்கு அரசனாக வேண்டுமென்ற ஆவேசம் பிறந்து விட்டது; அரண்மனை சென்றான், ஏலத்துக்கு தயாராக நின்றான். பெருந்தொகை தந்தான். மணிமுடி தரித்த தலை கீழே உருண்டிருப்பதையும் கண்டான்; கவலையைக் கொண்டானில்லை "கூப்பிடு ஆடலழகிகளை" என்று உத்தரவிட்டான். கீதம் கிளம்பட்டும்" என்றான். குயில்கள் பாடின; மயில்கள் ஆடின; மன்னன் உண்டான், உருசியுள்ள பானங்களைப் பருகினான். தன்னை மறந்தான்.

மணிமுடி அதிகாரத்தை ஒருவன் பெற்றான் என்பதற்குச் சின்னமே யொழிய, ஊரார் சம்மதித்தே தீருவார்கள் என்பதற்கு உறுதிமொழிச் சீட்டல்லவே! விலை கொடுத்து வாங்கியது அரசுரிமையை என்று ஜூலியானஸ் நம்பினான்; வாங்கியது கோர மரணத்தை என்பதைச் சம்பவம் விளக்கிற்று.

நைஜர், செவரஸ், அல்பீனஸ் என்னும் மூன்று படைத்தலைவர்கள் புரட்சிக் கொடியைப் பறக்கவிட்டனர். சிரியாவிலே இருந்து நைஜர் தன் படைபலத்தை நம்பினான். "நானே மன்னன்" என்று பிரகடனப்

படுத்திவிட்டான், செவரஸ் என்பானோ, பானோனியார பிரதேசத்தில் புரட்சிக் கொடியை பறக்க விட்டான்.

ஆல்பீனஸ், பிரிட்டனிலே இருந்துகொண்டு. "ரோம் அரசுரிமை எனக்குத்தான் என்றான். செவரஸ் ஒரு சூது செய்தான். ஆல்பீனசை ஏய்த்தான், உனக்காக நான் இங்கு வேலை செய்கிறேன்". என்று கூறி, ஆல்பீனசை ரோம் வரவிடாதபடி தடுத்துவிட்டான். பின்னர் படையுடன் ரோம் நோக்கிப் புறப்பட்டான்.

அரண்மனையிலே ஜூலியானஸ் தவித்தான். திணறினான். யாராரையோ உதவிக்கழைத்தான். ஓலமிட்டான். செனட் சபை கூடிற்று, செவரசுக்கே பட்டம் என்று தீர்மானித்தது. ஜூலியானசுக்கு கிலி பிடித்துக் கொண்டது. கதறினான், செனட் சபையின் ஏவுதலால் கிளம்பினார்கள் சில போர் வீரர்கள். ஜூலியானசைக் கொன்றனர். அரசை விலை கொடுத்து வாங்கி ஆடம்பரமாக வாழலாம் என்று கனவு கண்ட மணிலாவும், கிளாராவும் அரண்மனையை விட்டு வெளியே விரட்டப்பட்டனர்.

